# கல்கி

KALKI
24.1.93
ரூ. 3.00



கால்பந்து:

## வியக்க வைக்கும் விவரங்கள்!


KERA



# பகலை வெல்லும் வெளிச்சமும்; பசுமை போர்த்திய மைதானமும்!

நேரு ஸ்டேடியத்தில் போடப்பட்டுள்ள சக்திவாய்ந்த மின் விளக்குகளின் காரணமாக அந்தப் பகுதியே ஜெகஜ்ஜோதியாக இருக்கிறது. மன்ரோ சிலைப் பக்கமிருந்து பார்த்தால் கூட ஏதோ ஜாஜ்வல்யமான பறக்கும் தட்டு ஒன்று, வேறு கிரகத்திலிருந்து வந்து இறங்குகிறதோ என்ற பிரமிப்பு ஏற்படுகிறது. இரவைப் பகலாக்குவது மட்டுமல்ல; பகலுடன் போட்டி போடும் அளவுக்கு வெளிச்சம் வாரி இறைக்கப்பட்டிருக்கிறது. புகழ்மிக்க சர்வதேச ஸ்டேடியங்களுக்கு இணையாக ஸ்டேடியம் மின் விளக்குகளால் சூழப்பட்டிருக்கிறது.

ஸ்டேடியத்தின் நான்கு மூலைகளில் மட்டுமின்றி ஸ்டேடியத்தின் மேற் புறமிருந்தே கூட ஒளி வெள்ளம் பாய வகை செய்யப்பட்டுள்ளது. இதற்காகப் பக்கவாட்டில் வளைவான கோபுரங்கள் அமைந்துள்ளன. மைதானத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் ஒளி வெள்ளம் சரி சமமாகப் பாய்கிறது.

வெளிச்ச சக்தியை அளிக்க 'லக்ஸ்' என்ற குறியீடு பயன்படுத்தப்படுகிறது. ஸ்டேடியத்தின் வெளிச்ச சக்தி 1500 'லக்ஸாம்'. நான்கு மூலை விளக்குக் கோபுரங்கள், இரண்டு பக்கவாட்டில் உள்ள கோபுரங்கள் ஆகியவற்றில் உள்ள விளக்குகளின் எண்ணிக்கை 430. இவை ஒவ்வொன்றிலும் 2000 வாட் சக்தி கொண்ட மெடல் ஹாலைட் விளக்குகள். விளக்குகளின் ஃபிட்டிங்குகளும் சரி, விளக்குகளும் சரி, பிலிப்ஸ் தயாரிப்புத்தான்.

மைதானத்தில் இரவில் ஆட்டம் நடைபெறும் போது யாருடைய நிழலும் விழாதபடி, வெளிச்சம் பாயும். இரவில் ஆட்டம் நடைபெறும் போது கலர் டீ.வி. ஒளிபரப்பு என்றால் எல்லா விளக்குகளையும் போட வேண்டும். கறுப்பு வெளுப்பு ஒளிபரப்பு என்றால் அனைத்து விளக்குகளையும் போடத் தேவையில்லை. மேலும் ஸ்டேடியத்தின் விளக்குகள் 25 சதவீதம் எப்போதும் டீஸல் ஜெனரேட்டரில்தான் இயங்கிக் கொண்டிருக்கும். இதனால் பவர்-கட் ஆனாலும், பதற்றம் இருக்காது.

மைதானம் 105 மீட்டர் நீளமும் 68 மீட்டர் அகலமும் உள்ளது. இயற்கையான புல் மைதானம். கல்கத்தாவில் இருக்கும் புகழ் பெற்ற ஸால்ட் லேக் ஸ்டேடியத்தில், மைதானத்தை அமைத்துக் கொடுத்த ஸோமன் பானர்ஜிதான் நேரு ஸ்டேடிய மைதானத்தையும் அமைத்திருக்கிறார். வண்டல் மண், செயற்கை உரம், சாணம், ஆகியவற்றைக் கலந்து மண்ணைப் பதப்படுத்தியப் பின், புல் வளர்த்து, அதை நன்றாக 'டிரிம்' செய்திருக்கிறார்கள். புல்லின் உயரம் 150 மில்லி மீட்டர். இயற்கையாகவே புல் வளர்க்கும் தன்மையில் மண்வளமிருப்பதால் பாலி மெட்டிரியலைப் பயன்படுத்தி உருவாக்கப்படும் செயற்கைப் புல் மைதானம் (Astro Turf) அமைக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை.

பசுமை போர்த்திய மைதானத்தைச் சுற்றி எட்டு லேன் கொண்ட ஸிந்தடிக் அத்லெடிக் டிராக் இருக்கிறது.

– தில்லப்பா



● புஸ்காஸ்

# கால் பந்தாட்டம்:

டெலிவிஷன் என்ற அற்புத சாதனம் இன்று சர்வதேச கிரிக்கெட், கால்பந்து முதலானவற்றைச் சமையலறைக்கே கொண்டு வந்து விட்டது. டிவி வரவேற்பு அறையில் இருந்தாலும் கூட, சமையலறையில் கை ஓயும் போது வந்து வந்து பார்த்து விட்டுப் போகும் இல்லத்தரசி, இன்று சர்வதேச விளையாட்டுக்கள் பற்றி விவாதிக்கவும் கருத்துத் தெரிவிக்கவும் தகுதியுடையவளாகி விட்டாள். பீலேயும் மாரடோனாவும், அசாரும் கபிலும் அவளது உரையாடலில் இடம் பெறுகிறார்கள். ஆக, நேரு தங்கக் கோப்பைக் கால்பந்தாட்டம் சென்னையில் நடக்கிறது என்றால் முன்னெப்போதையும் விட அதிகமான ரசிகர்களை அது பெற்றுள்ளது. ஸ்டேடியத்துக்கு நேரில் வருவோர் மட்டுமின்றி, வீடுதோறும், வீடுதோறும் ஆட்டத்தின் நுணுக்கங்கள் அலசப்படும்; வெற்றி தோல்விகள் விவாதிக்கப்படும்.

ரசிகர்கள் ஒரு பக்கமிருக்க, கால்பந்து ஆடுவோருக்கு இது ஓர் அரிய வாய்ப்பு. உலகத் தரத்தில் பலர் வந்து ஆடும் போது, சற்றே பொறாமையுடன் பார்த்தாலும் அவர்களிடமிருந்து கற்றுக் கொள்ளக் கூடியது நிறையவே இருக்கும்.

## ரசிகர்களுக்கு நன்றி

நேரில் பார்ப்பதை விட ஆட்ட நுணுக்கங்களை டிவியில் இன்னும் நன்றாகவே பார்க்கலாம் - வீட்டிலே வசதியாக அமர்ந்தபடி. என்றாலும், நேரில் காண்பதையே பலர் ஆர்வத்துடன் விரும்பி ஸ்டேடியம் நோக்கிப் படையெடுப்பார்கள். இதற்கு ஒரு முக்கிய காரணம், கூட்டத்தோடு கூட்டமாக இருந்து கோஷிப்பதில் ஒரு "த்ரில்" இருப்பதுதான். ஆட்டத்தின் ஜுர வேகம் பார்ப்பவரையும் பற்றிக் கொள்ளும். ஆட்டக்காரர்களை ஊக்குவிப்பவர்களும் இப்படி நேரில் வருபவர்கள்தாம். மாவட்ட அளவிலோ, தேசிய அளவிலோ, சர்வ தேசத் தரத்திலோ ஆடுபவர் யாராயினும் அவர்களுக்குக் கூட்டம் சேர்ந்தால்தான் உற்சாகம் பிறக்கும். ஆட்டத்தில் சூடு பிடிப்பதற்கும் பார்வையாளர்களின் கோஷங்கள் ஒரு காரணம். எனவே, கால்பந்து போன்ற ஆட்டங்கள் நலிந்து, மறைந்து போகாமல், போட்டா போட்டி அதிகரித்து, வீரமுடன் ஆடப்படுகின்றன எனில் அதற்கு, நேரில் வந்து பார்க்கும் ரசிகர்களுக்கே ஆட்டக்காரர்கள் நன்றி சொல்ல வேண்டும்.

இதே நேரத்தில் கால் பந்தாட்டத்தில் நாம் கணிசமான முன்னேற்றம் காட்டவில்லை என்பதையும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். எத்தனையோ "டோர்னமெண்ட்கள்" நடக்கின்றன; வசதிகளுக்கும் பஞ்சமில்லை. நல்ல ஆட்டக்காரர்களையும் நாம் உருவாக்கியிருக்கிறோம். ஆனாலும் சிறந்த ஆட்டக்காரர் என்பதற்கும் பிரமாத ஆட்டக்காரர் என்பதற்கும் இடையே உள்ள வெற்றிடத்தை நிரப்ப நம்மால் முடியவில்லை. ஏன் இப்படி? அடுத்த படியில் ஏன் ஏற மாட்டேனென்கிறோம்? இது விடுவிக்க முடியாத ஒரு புதிர்தான்.

'ஒலிம்பிக்ஸில் ஏன் படுதோல்விகளைச் சந்திக்கிறோம்? கிரிக்கெட்டில் ஏன் நழுவிக் கொண்டிருக்கிறோம்? தேசிய விளை



● கல்கத்தாவில் நடந்த நேரு தங்கக் கோப்பைப் போட்டி (யு.எஸ்.எஸ்.ஆர் - போலந்து)

# கலை, வீரத்தின் சங்கமம்!

யாட்டு என்று கருதப்படும் ஹாக்கியில் கூட ஏன் பின் தங்கி வருகிறோம்?' என்றெல்லாம் யோசித்து விடை கிடைத்தால், கால்பந்தாட்டத்தில் அரைகுறை வளர்ச்சிக்கும் விடை கிடைத்து விடும்!

## உலகளாவிய ஆர்வம்!

**ம**ற்ற பல ஆட்டங்களையும் விட கால்பந்துக்கு உலகளாவிய ஆர்வம் மக்களிடையே இருக்கிறது. மக்களின் ஆட்டமாகவே கருதப்படுகிறது. அதில் ஆண்மை அதிகம்; ஆற்றலும் தேவை. ஆக்கிரமிக்கவும் வேண்டும்; அதைக் கலை உணர்வுடன் செயல்படுத்தவும் வேண்டும். இதனாலெல்லாம் அது மக்கள் மனங்களை வெகுவாகக் கவர, 50 கோடிக்கும் அதிகமான



● பீலே

ரசிகர்கள் கால்பந்தாட்டத்துக்கு உண்டு என்று மதிப்பிடப்பட்டுள்ளது. எழுபதுக்கும் மேற்பட்ட நாடுகள் கால்பந்து ஆடுகின்றன. உலகிலேயே மிக அதிகமான ரசிகர்கள் மட்டுமின்றி, மிக அதிகமான ஆட்டக்காரர்களையும் பெற்றிருப்பது கால்பந்துதான்!

கால்பந்தையே வாழ்க்கையாகவும் தொழிலாகவும் கொண்டிருக்கும் பல ஆட்டக்காரர்கள், ஜனாதிபதிகளையும் சர்



● மரடோனா

வாதிகாரத் தலைவர்களையும் விட அதிகமான வருவாய் பெறுகிறார்கள்! கால்பந்துக் கோடீசுவரர்கள் உலகில் ஏராளம்.

## பரபரப்பான பழங்கதை!

**கா**ல்பந்தாட்டத்துக்கு நீண்ட சரித்திரம் உண்டு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு சீனர்கள், இலிப்புக்கு உள்ளான ஒரு உருண்டைப்பையை வைத்துக் கொண்டு விளையாடினார்கள். அந்தப் பந்தின் அளவு கிட்டத்தட்ட இன்றுள்ள கால்பந்தின் அளவுதான்! அதை அன்றைக்கே உதைக்க மட்டுமின்றி தலையால் தாக்கவும் செய்தார்கள் என்பதற்குச் சான்றுகள் கிடைத்துள்ளன!

சிறு சிறு அணிகளாகப் பிரிந்து விளையாடினார்கள்.

இதாலியில் ஃப்ளாரன்ஸ் நகரில் பத்தாம் நூற்றாண்டு வாக்கில் கால்பந்து ஆடப்பட்டது. ஆனால் அதில் முரட்டுத்தனம் மிகுதியாக இருந்தது. ஆக்கிரமிப்பு உணர்வே அதிகமாக இருந்த ஆட்டம் அடிக்கடி ரணகளமாகவே ஆகிவிடும். இன்றைக்கும் கூட ஐரோப்பாவின் சில பகுதிகளில் இத்தகைய முரட்டுத்தனமான வீர விளையாட்டாகவே கால்பந்து ஆடப்படுகிறது.

18 - ம் நூற்றாண்டு வாக்கில் பிரிட்டனுக்கு வந்து சேர்ந்த கால் பந்து, படிப்படியாக நாகரிகமடைந்து ஓரளவு மிருதுத் தன்மை பெற்றது. அங்கே பள்ளிக் கூடங்களில் மிகவும் பிரபலமடைந்தது. சீக்கிரமே சட்ட திட்டங்களும் விதி முறைகளும் உருவாகின. கால்பந்துக் கழகம் என்ற அமைப்பும் ஏற்பட்டது. முதல் சர்வதேச ஆட்டம் இங்கிலாந்துக்கும் ஸ்காட்லாந்துக்கும் இடையே 1872 - ம் ஆண்டில் மேற்கு ஸ்காட்லாந்தில் ஒரு கிரிக்கெட் மைதானத்தில் நடந்தது. ஆயினும் பிரிட்டிஷார் பொதுவாக ஒதுங்கும் மனப்பான்மை உடையவர்களாதலால் பிரிட்டிஷ் தீவுகளுக்கு அப்பால் நீண்ட காலத்துக்குக் கால்பந்து அதிகம் பரவவில்லை.

## "கறுப்பு முத்து!"

**1900** - இல் ஒலிம்பிக்கில் கால்பந்து இடம் பெற்றுவிட்ட போதிலும், 1904 - ல் தான் ஆட்டத்துக்கு இறக்கை முளைத்தது போல் பரவத் தொடங்கியது. இதற்கு முக்கிய காரணம் பிரெஞ்சு நாட்டவரே. அவ்வாண்டு மார்ச் முதல் தேதி FIFA என்ற அமைப்பு பாரிஸில் உருவானது. சர்வதேச கால்பந்துச் சங்கங்களின் கூட்டமைப்பு என்பது இதன் விரிவாக்கம்.

கடல் வாணிபத்தில் சிறந்து விளங்கிய பிரிட்டிஷார், தாங்கள் சென்ற இடமெல்லாம் கால்பந்தை எடுத்துப் போக, அந்தந்த நாட்டவரும் அதைப் பார்த்து விட்டு ஆடத் தொடங்கினர். அவ்வாறுதான் அர்ஜென்டைனா, இந்தியா முதலான நாடுகளுக்குக் கால்பந்து வந்து சேர்ந்து, பின்னர் அண்டை நாடுகளுக்கும் பரவியது.

கால்பந்துக்குச் சர்வதேச அமைப்பு தோன்றிய பிறகு கிட்டத்தட்ட கால் நூற்றாண்டு காலம் தென் அமெரிக்காதான் அந்த ஆட்டத்தில் சிறந்து விளங்கியது. உலக அரங்கில் உருகுவே நாடுதான் கால்பந்தாட்டத்தில் வல்லரசு என்று கருதப்பட்டது. 1924, 1928 ஒலிம்பிக்குகளில் உருகுவேதான் வென்றது. ஆண்ட்ரேட் என்பவர்தான் அன்று உருகுவேயின் மாபெரும் ஹீரோ. அவருக்குக் ''கறுப்பு முத்து'' என்று பட்டப் பெயரும் உண்டு.

FIFA உலகக் கோப்பை நிறுவப்பட வேண்டும் என்ற யோசனையை முன் வைக்க, முதன் முதலில் 1930 - ல் உலகக் கோப்பைக்கான ஆட்டம் நடந்தது. ஹாஃப் டைம் எனப்படும் இடைவேளை வரை அர்ஜென்டைனாவே முன்னணியில் இருந்தது. அதன் பின்னர் உருகுவேக்குச் சூடு பிடிக்க 4 - 2 என்ற கோல் எண்ணிக்கையில் அது அர்ஜென்டைனாவைத் தோற்கடித்தது. இறுதி கோலை போட்டவர் உருகுவேயின் காஸ்ட்ரோ; இவர் ஒற்றைக் கை மனிதர் என்பது குறிப்பிடத்தக்கது! இரண்டு ஒலிம்பிக் தங்க மெடல்களும் உலகக் கோப்பையும் பெற்ற உருகுவே தன்னிகரற்ற உலக சாம்பியனாகத் தோள் தட்டிக் கொண்டது.

## தங்கக் கோப்பை

**உ**லகக் கோப்பைக்கு இன்று அதிகார பூர்வமான பெயர் ஜூல்ஸ் ரிமே கோப்பை என்பதாகும். FIFA தலைவராக 1921 முதல் 1953 வரை 32 ஆண்டுகள் இருந்த பிரெஞ்சு வழக்கறிஞரின் பெயராலேயே கோப்பை இன்று வழங்கப்படுகிறது. பன்னிரண்டு அங்குல உயரமுள்ள கோப்பை முழுக்க முழுக்கத் தங்கத்தால் ஆனது. இதனைப் பெற போட்டா போட்டி ஏகமாக உருவாயிற்று. குறிப்பாக ஐரோப்பாவில். 1934 - ல் முசோலினி முன்னிலையில் நடந்த இரண்டாவது உலகக் கோப்பைப் போட்டியில் இதாலியே வென்றது! அன்று இதாலிய அணியை நிர்வகித்தவர் விட்டோரியோ போஸ்ஸோ எனில், அணிக்குத் தலைமை தாங்கியவர் சூப்பர் ஸ்டார் ஃபைபயோலா. இறுதி ஆட்டத்தில் செக்கோஸ்லோவாகியா





# கால்பந்தின் கண்ணீர்!

டூரின் என்ற நகரில் 1949 – ல் ஏற்பட்ட விமான விபத்தில் இதாலிய தேசிய கால்பந்தாட்ட சாம்பியன்கள் பலர் ஒரே சமயத்தில் மாண்டு போயினர். இதனால் ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து மீண்டு இதாலி தனது அணியை மறுபடி உருவாக்க அரும்பாடு பட்டது. இதே போல் 1958 – ல் மியூனிக் நகர விமான விபத்தில் மான்செஸ்டர் யுனைடெட் என்ற இங்கிலாந்து அணியைச் சேர்ந்த பலர் அழிந்து போக, பிரிட்டன் தனது தேசிய சாம்பியன்கள் பலரை ஒரே சமயத்தில் இழந்து பரிதவித்தது.

## வியூக அமைப்பு

ஒரு கால்பந்தாட்ட அணி என்பது ஒரு கோல் கீப்பர், இரண்டு ஃபுல் பேக், மூன்று ஆஃப் பேக், ஐந்து ஃபார்வர்டு என்று பதினோரு நபர்களைக் கொண்டது. 2–3–5 என்ற இந்த வியூக அமைப்பு அவ்வப்போது ஆட்டத்தில் கையாளப்படும் தாக்குதல் (யுத்த) தந்திரத்துக்கு ஏற்ப 4–2–4 என்றும் வேறு விதமாகவும் மாறுவதுண்டு. எதிர் அணியின் திறமையும் இந்த வியூக மாற்றத்தை நிர்ணயிக்கும் ஓர் அம்சமாகும்.



## கோப்பையைக் காணோம்!

உலகக் கோப்பை 1966 –ல் காணாமல் போய்விட்டது பிரிட்டனில் வெம்பிளி ஸ்டேடியத்தில் ஒரே பரபரப்பு! கடைசியில் "பிக்கிள்ஸ்" என்ற பெயர் கொண்ட ஒரு நாய் தான் யதேச்சையாக அதனை ஒரு புதர் மறைவிலிருந்து கண்டுபிடித்துக் கவ்விக் கொண்டு வந்து சேர்த்தது! நல்ல வேளை பரிசு வழங்கும் சமயத்துக்கு முன்னரே கோப்பை கண்டு பிடிக்கப்பட்டு விட்டது!

வைச் சந்தித்த இதாலி எக்ஸ்ட்ரா டைமில் வென்றது! இந்த வெற்றியைப் பிரமாதமாகக் கொண்டாட சர்வாதிகாரி முசோலினி உத்தரவிட்டார். இதன் பிறகு தொடர்ந்து 1936 ஒலிம்பிக்கிலும் 1938 - ல் உலகக் கோப்பையும் இதாலியே வென்று, உருகுவேயைப் பின்னுக்குத் தள்ளியது.

### பார்வையாளர் இரண்டரை லட்சம்!

உலக யுத்தத்தின் போது கால்பந்தாட்டம் காணாது போயிற்று. மறுபடி 1950 இல் பிரேஸில் நாட்டின் தலைநகர் ரியோ டி ஜனிரோவில்தான் தொடங்கியது. இதற்குள் அங்கே இரண்டு லட்சம் பேர் அமரக் கூடிய மரகானா ஸ்டேடியம் உருவாகியிருந்தது.

சகல வசதிகளையும் படைத்திருந்த இந்த ஸ்டேடியத்தில் அந் நாட்டவரே வெற்றி பெற வேண்டும் என்று பிரேஸில் மக்கள் விரும்பியதில் வியப்பில்லை. இரண்டு லட்சத்து ஐம்பதாயிரம் பேர் கூடியிருக்க, அவர்களில் பெரும்பாலோர் "பிரேஸில் - உலக சாம்பியன்" என்று எழுதப்பட்ட டி ஷர்ட்டுகளும் அணிந்திருந்தனர். ஆரம்பத்தில் பிரேஸில் ஒரு கோல் போட, ஆர்வம் மேலும் அதிகரித்தது. ஆனால் இடைவேளைக்குள் உருகுவே சமன்படுத்தி விட, ஆட்டம் முடிய 11 நிமிடங்கள் இருந்தபோது மேலும் ஒரு கோல் போட்டு உருகுவே வென்றது. சிங்கம் அதன் குகையிலேயே அடக்கப்பட்டது போலாயிற்று.

இதன் பிறகு ஹங்கேரியின் கை உயர்ந்து, கிட்டத்தட்ட பத்து ஆண்டுகள் தன்னிகரற்று விளங்கியது. இந்த அணிக்கு புஸ்காஸ் என்பவர் தலைமை தாங்கினார். 1954 - ல் இந்த அணிதான் உலகக் கோப்பையை வெல்லும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் ஸ்விட்சர்லாந்தில் நடந்த பந்தயத்தில் பிரேஸிலை வென்ற போதிலும், ஜெர்மனியிடம் தோற்றுப் போய் ஹங்கேரிய அணி வெறும் கையுடன் திரும்பியது. அப்புறம் அந்த அணியும் தகர்ந்து போயிற்று.

### உலகைக் கலக்கிய பீலே

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் 17 வயது பீலே, கால்பந்தாட்ட அரங்கில் புகுந்து உலகையே ஒரு கலக்குக் கலக்கினான். பிரேஸில் நாட்டின் சின்னமாகிய மஞ்சள் பூவை அணிந்து முதல் முறையாக 1958 - ல் பிரேஸிலுக்கு உலகக் கோப்பையைப் பெற்றுத் தந்தான். தொடர்ந்து 1962 லும் 1970 லும் பிரேஸிலே உலகக் கோப்பையைப் பெற, மும்முறை வென்ற காரணத்தால்

## தர்மபுரிவாசிகளே, நினைவூட்டுகிறோம்!

**'மாதம் ஒரு நகரம்' என்கிற கல்வியின் சமுதாயப் பணித் திட்டத்தில் இம்மாதம் தர்மபுரியைத்தான் தேர்ந்தெடுத்திருக்கிறோம் என்பது நினைவிருக்கிறதல்லவா! அப்புறம், இன்னும் என்ன தயக்கம்?**

**உடனடியாகத் தர்மபுரியிலுள்ள சாதனைகளையும் குறைநிறைகளையும் எழுதியனுப்புங்கள்.**

உங்கள் கடிதங்கள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : 30.1.93.

– ஆசிரியர்

அந்தச் சுழல் கோப்பை பிரேஸிலுக்கே சொந்தமாகி விட்டது! (அடுத்து வந்த ஆட்டங்களுக்காக வேறு புதிய உலகக் கோப்பை உருவாக்க நேர்ந்தது!) இந்தச் சாதனைக்கு பீலேதான் முக்கியமான காரணம். ஆயிரம் கோல்கள் போட்ட பீலேயின் சாதனையை அதற்கு முன் கால்பந்தாட்டச் சரித்திரத்தில் வேறு இருவர் மட்டுமே சாதித்துள்ளனர்.

இடையில் ஒரு சமயம் பிரிட்டனில் உலகக் கோப்பை பந்தயம் நடந்த போது பிரிட்டனே கோப்பையை வென்றது. இங்கே அர்ஜெண்டைனா முரட்டு விளையாட்டில் இறங்கியது. ஆட்டத்திலிருந்து இந்த அணியைச் சேர்ந்த ஒருவர் வெளியேற்றப்பட்டார். இங்கு நடந்த மற்றொரு மறக்க முடியாத நிகழ்ச்சி, ஹர்ஸ்ட் அடித்த பந்து, கோலின் குறுக்குச் சட்டத்தைத் தாக்கி, கோல் கோட்டில் விழுந்ததுதான். இது ஒரு கோல் என்றே அறிவிக்கப்பட்டாலும் பலத்த எதிர்ப்பும் இருந்தது. ஆயினும் என்ன, பிரிட்டிஷ் அணி மேற்கு ஜெர்மனியை வென்று விட, பிரிட்டிஷ் அரசியிடமிருந்து காட்டன் பாபி மூர் தங்கக் கோப்பையைப் பெற்றார்!

*1970* - ல் உலகக் கோப்பை பந்தயம் மெக்ஸிகோவில் நடக்க, அங்கே மறுபடி பிரேஸில் தனது கால்பந்தாட்டக் கலை நுணுக்கத்தைத் திறம்படக் காட்டி இறுதி ஆட்டத்தில் இதாலியை வென்றது. இந்நாள் வரை ஆடியுள்ள டீம்களில் இந்த அணியே சிறந்தது என்றும் இதுவரை இவ்வளவு நேர்த்தியாகக் கால்பந்தாட்டம் ஆடப்பட்டதே இல்லை என்றும் இரட்டைப் பெருமைகளை பிரேஸில் தட்டிக் கொண்டு போயிற்று! இந்த அணியில் இருந்த பீலே டோஸ்டாவோ, ஜெக்காலோ போன்றவர்களைக் கால்பந்தாட்ட விசிறிகள் மறப்பது அரிது.

### *கலை நுணுக்கத்துக்கு மாரடோனா*

**ப**த்தாவது உலகக் கோப்பைப் பந்தயம் ஜெர்மானிய நகர் மியூனிக்கில் நடைபெற, இறுதி கட்டத்தில் வலிமை மிக்க ஹாலந்து அணியை உள்நாட்டு அணி வென்று பெருமையுற்றது.

*1978* - ல் அர்ஜெண்டைனாவில் நடந்த போட்டியில் அந்நாடே வெற்றி பெற்றது.

*1982* - ல் பார்ஸிலோனா. இங்கே பிரசித்தி பெற்ற பாலோ ராஸி என்ற இதாலியரின் பெயரைத்தான் அனைவர் உதடுகளும் ஜபித்தன. இதாலிய ஜனாதிபதி உள்பட அந்நாடு முழுவதுமே அவருக்கு வணக்கம் செலுத்தி வாழ்த்தி மகிழ்ந்தது.

மறுபடி மெக்ஸிகோ. மீண்டும் அர்ஜெண்டைனாவுக்கு வெற்றி. கால்பந்து அதன் கலை நுணுக்கத்தை இழந்து முரட்டுத்தனமே முன்னின்ற காலகட்டம் அது. அதில் மீண்டும் கலை நுணுக்கம் குடியேற அர்ஜெண்டைனா உதவியது எனில், அதற்கு முக்கிய காரணம் மாரடோனாதான். வெளிர் நீலமும் வெள்ளையும் இடம்பெற்ற சட்டை அணிந்திருந்த இந்த நடுத்தர உயரமுள்ள மேதை, ஒரு மாபெரும் கலைஞனாகத் தன்னை நிரூபித்துக் கொண்டான். அசாதாரண ஆற்றல் காட்டி, தனது அணிக்கு மட்டுமல்ல, கால்பந்து ஆட்டத்துக்கே பெருமை சேர்த்தான் மாரடோனா

ஸ்பெயின் நாட்டுக்கு ஆடிய ஸ்டெஃபானோ, பிரேஸிலுக்கு ஆடியே பீலே, அர்ஜெண்டைனாவின் மாரடோனா ஆகியோர் கால்பந்தாட்டத்தின் மும்மூர்த்திகள் என்று கருதப்படுகின்றனர்.

### *கலையா? முரட்டு வெறியா?*

**சு**டைசியாகச் சென்ற முறை இதாலியில் நடந்த உலகக் கோப்பைப் பந்தயத்தில் ஜெர்மனியின் முரட்டுத்தனம் அர்ஜெண்டைனாவின் கலை நுணுக்கத்தை முறியடித்துக் கோப்பையைத் தட்டிக் கொண்டு போயிற்று.

எதிர்காலத்திலும் இதே போட்டி கலை நுணுக்கத்துக்கும் முரட்டுத்தனமான விளையாட்டுக்கும் இடையே நடைபெறும்.

அதற்கு ஒரு முன்னோடியாகச் சென்னையில் நடக்கும் நேரு கோப்பைப் பந்தயம் விளங்கி, காற்று எந்தத் திசையில் வீசுகிறது என்பதை உணர்த்தும்.

தொகுப்பு : தி. கோவிந்தராஜன்

*(கட்டுரை ஆசிரியர், ஹிந்து பத்திரிகையில் விளையாட்டு விமர்சகராக இருந்து ஓய்வு பெற்றவர். அகில இந்திய ஸ்போர்ட்ஸ் நிருபர்கள் சங்கத்தின் முன்னாள் தலைவர்.)*

# பிதர்களுக்கு சிராத்தம் ஏன்? அவசியம் செய்ய வேண்டும்



சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92



இத்துடன்
கிராண்ட் ஸ்வீட்ஸ்
வாங்கி
நல்லோர்களுக்கு
விநியோகம் செய்யவும்.

**திருமண வைபவங்களுக்கு:**

சீர் முறுக்கு, சீர் அதிரசம், திரட்டுப் பால், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய், அப்பம் வகைகள் முதலியவைச் செய்துத் தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

நெ. 24, 2வது
மெயின் ரோடு
காந்தி நகர்
அடையாறு
சென்னை-20.
போன்: 412557







"இவர்தான் கோல் போட்டு 'ட்ரா' பண்ணினார்!"
"அப்படியா, பேஷ்!"
"பேஷ் இல்லை சார்!.. நம்ம ஸைட் ஒரு கோல் லீட்லே இருந்தது! இந்த மடையன் 'ஸேம் ஸைட்' கோல் போட்டு ட்ரா பண்ணிட்டான்!"



நீங்க ஃபுட்பால் ப்ளேயர்!... புரிஞ்சுக்குங்க! 'ரெட் கார்ட்' காண்பிச்சு, இப்ப யெல்லோ கார்ட் காண்பிக்கிற நிலைமை!

# 1/4 பந்து - முழு ஜோக்!








பாவி! கணக்கு வழக்கில்லாம எல்.பி.
டபிள்யூ!... இந்த அம்பயர் வேற
கண்டுக்கறதில்லே!


தலையிலே அடிச்சுக்
கிட்டேன்!... இந்த
ரெஃபரி உத்யோகம்
வேணாம்னு...! கேட்
டீங்களா?






"இந்த ஃபுட்பால் ப்ளே
யருக்குத் தான் ஏன்னவோ
மந்திரிங்கற நினைப்பு! வத
வதன்னு பெத்துத் தள்ளி
யிருக்கான்! ஒரு ஃபுட் பால்
டீமுக்குப் போதும்!"


"அது மாத்திரமா?
சின்ன வீடு
முலமாவும்
குழந்தைங்க... அது
ஸப்ஸ்டிட்யூட்டுக்கு
ஆச்சு!"

# விமர்சனம்

●● உங்களுக்கு சாகித்ய அகாடமி பரிசு வேண்டுமா? ரொம்ப சுலபம். யாராவது, யாரையாவது கொலை செய்கிறார்களா என்று பாருங்கள். பழியை வாங்கி, உங்கள் தலையில் போட்டுக் கொள்ளுங்கள். ஜெயிலுக்குப் போய் வாழ்க்கை வரலாறு எழுதுங்கள். எழுதி விட்டு, ஏதாவது பப்ளிஷருக்கு அதைத் தரும்முன், மூக்தா பிலிம்ஸுக்கும் ஒரு போன் அடித்துத் தகவல் சொல்லி விடுங்கள். அவர்கள், மிச்சத்தைக் கவனித்துக் கொள்வார்கள். மேற்படி உத்தியைப் பயன்படுத்தி, ஞாயிறு திரைப்படம் 'எதிர்(க்) காற்று' கதா நாயகன் கார்த்திக் வெகு சுலபமாக அவார்டு வாங்கியிருக்கிறார். இத்தனை சுலபமாய் இந்த விஷயம் இருக்கிற பட்சத்தில், இன்று அவரவர் வாயில் அகாடமி அவார்டு, 'பக்கோடா'வாகக் கிடைக்க வேண்டிய அவசியம் இருந்திருக்காது.

## பொங்கல் பரிசா? ஐயோ, பொங்கலே வேண்டாம்!



● கலப்பட அவார்டு

●● இவ்வார நாடகம் 'எங்க வீட்டு மருமகள்'. (டைட்டில் விஷயத்தில் டி.விக்கும் ஏதாவது Compulsion?) சும்மா சொல்லக் கூடாது. அம்மாமிக் கதைகளுக்கு அன்று முதல் இன்று வரை மாறாத ஆதரவு தரும் டி.வியை எத்தனை பாராட்டினாலும் தகும். As usual மாமியார், மருமகள். இடையில் ஒரு கூனி. தனிக் குடித்தனப் போர். கடைசியில், 'என்னை மன்னிச்சிடுங்க'. கலியுகத்துக்கு அடுத்தது என்ன யுகம்? அப்போதும் நம்மூர் டி.வி. நாடகம் இப்படியேதான் இருக்கும்.

●● இரண்டாவது சேனலில் Aspiration என்றொரு நிகழ்ச்சி. பெரும்பாலும் அணைத்து விடத் தோன்றும். இந்த புதன் மட்டும் விலக்கு. கே.வி. மாத்யூ என்பவர் தொடர்ந்து ஜோக் அடித்தார். ஓர் அசைவ ஜோக் உட்பட அன்றைய அவரது நிகழ்ச்சி மிகவும் சுவாரஸ்யம். பார்வையாளர்களாக உட்கார்ந்திருந்தவர்களுக்கு, கண்டிப்பாக வரிக்கு வரி சிரித்தே ஆக வேண்டும் என்று அறிவுரைத்திருந்தார்களோ என்னமோ, அவர்கள், சந்தர்ப்பம் இல்லாத இடங்களிலெல்லாம் கூட செயற்கையாகச் சிரித்தது எரிச்சல்.

●● 'திரௌபதி பதிவிரதையா?' - இப்படி ஒரு விவகாரமான தலைப்பில் வியாழன் இரவு ஒரு மாமா (தாத்தா?) பேசினார் பாருங்கள், இந்த ஜென்மத்தில் மறக்க முடியாது. ஐந்து புருஷன் என்பது வெறும் ரூபகங்கள்தான் என்றும், இந்திரனே அனைத்திலுமான ஆத்மா என்றும் அதற்கான புராண ஆதாரங்களோடும், பிற கிளைக் கதைகளோடும் வெகு இயல்பாக விளக்கினார். நம் ஊரில் ஏது, இப்படியெல்லாம் நிகழ்ச்சி? இது ஹைதராபாத் ஒளிபரப்பில் பார்த்தது.

● சளைக்காமல் மோதி......



●● பொங்கலுக்கு ஒரு வாரம் முன்பே 'பொங்கல் பரிசு' என்று (வியாழன் இரவு) இசை நாடகம் ஒன்று ஒளிபரப்பினார்கள். 'வயலும் வாழ்வும்'ஐத் தொடர்ந்த மற்றுமொரு 'வயலும், வாழ்வும்'. இப்படி ஒரு பரிசை பொங்கலுக்காக டி.வி. தருகிறதென்றால், பரிசு மட்டுமில்லை; பொங்கலே கூட வேண்டாம் என்று சொல்லத் தோன்றுகிறது.

●● ஸ்போர்ட்ஸ் டி. வி. யில் (ஸ்டார்) மல்யுத்தம் பார்ப்பது ஒரு புது அனுபவம். சளைக்காமல் மோதிக் கொள்ளும் சதைமலைகளும், விஷில் ஊதி, ஊதி குண்டுக் கன்னங்களுடன் (அழுத்தி ஒரே கிள்ளு!) குதித்துக் குதித்து ஓடும் நடுவர்களும், 'பெட்' கட்டிச் சண்டை போட்டுக் கொள்ளும் ரசிகர்களும் - சுவாரஸ்ய சிகாமணிகள்!

– கிச்சா

## சொல் விளையாட்டு - 2

# பரிசு ரூ. 250



ரோட்டில் வண்டி ஓட்டும் யாருமே இப்படி நினைப்பதில்லை.

**வ**ரிசை மாறியுள்ள எழுத்துக்களை நேராக்கி, கட்டங்களுக்குள் பொருத்தி ஒரு வார்த்தை உருவாக்குங்கள். பின்னர், வட்டமிடப்பட்ட எழுத்துக்களை மட்டும் தனியே குறித்துக் கொள்ளுங்கள். அவற்றைச் சரியான வரிசையில் பொருத்தி, கடைசி வட்டங்களை நிரப்பினால், படத்துக்கும் அதன் கீழேயுள்ள குறிப்புக்கும் ஏற்ற விளக்கம் கிடைக்கும்.

புதிர் விடையுடன் விலாசத்தையும் பூர்த்தி செய்து இந்தப் பக்கத்தைக் கத்திரித்து அனுப்ப வேண்டிய கடைசி தேதி : 3. 2. 93.

ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசு பகிர்ந்து அளிக்கப்படும். பத்துப் பேருக்கு மேல் சரியான விடை எனில் பத்துப் பேர் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படுவர். உறை மீது "சொல் விளையாட்டு - 2" என்று எழுதவும்.

ம் ட தா வ ண்

கா று ப் ற் பா

ற ட் த வி டு வ

பா ப் டு ட் ஆ ல்

பு த ரி வி ப ப்

ம ம் க ல ண் ணு

ர வ கா ம் சா

பெயர் : ........................................

விலாசம் : ........................................

........................................

........................................




# கல்கி

1993
ஜனவரி 24
மலர் : 51
இதழ் : 26
ஆங்கீரச
தை 11




## அனல் பறக்கும் வாதங்கள்;
## பற்றி எரியும் நகரங்கள்!

அத்வானி விடுதலை அடைந்ததில் பி.ஜே.பி தொண்டர்கள் மட்டுமின்றி நாட்டு மக்கள் எல்லோருமே நிம்மதி அடைந்திருப்பார்கள். தேவையின்றி அவர்களைச் சிறையில் வைக்க அனுமதி கோராமல், 'விசாரணை முடிந்தது, வழக்கு தாக்கல் செய்யப்படும், தொடர்ந்து காவலில் வைக்க அவசியமில்லை' என்று கூறிய அளவில், மத்திய அரசும் அரசாங்க வழக்குரைஞர்களும் கௌரவமாகச் செயல்பட்டிருக்கிறார்கள்.

இது ஒருபுற மிருக்க, மன நிம்மதியைக் குலைக்கும் காரியங்களும் கூடவே நடந்து கொண்டுதானிருக்கின்றன. பி.ஜே.பிக்குத் தோள் கொடுக்கும் வி.எச்.பி. தலைவர் அசோக் சிங்கால் ''டிசம்பர் ஆறாம் தேதியை ஆகஸ்டு 15 ஆகக் கருதவேண்டும்'' என்று கூறியதைக் கட்டத்தட்ட தேசத்துரோகமாகவே கருதலாம். அதற்குச் சற்றும் குறையாத அளவில் சில முஸ்லிம் தலைவர்களும் தவறிழைத்து, ''ஜனவரி 26 குடியரசு தினத்தைப் பகிஷ்கரிப்போம்'' என்று அறிக்கை விட்டனர். நல்ல வேளையாக, முஸ்லிம்களின் தனிச்சட்டக் குழு, இதனை வன்மையாகக் கண்டித்து, முஸ்லிம்களின் தேசபக்தி மற்றவர்களுக்குக் குறைந்ததல்ல என்று நிலை நாட்ட முயன்றுள்ளது.

''மசூதி இடிக்கப்பட்ட இடத்தில் கோயில் இருந்ததா இல்லையா?'' ''மசூதி இடிக்கப்பட்டது தவறா இல்லையா!'' என்றெல்லாம் நடக்கும் அனல் பறக்கும் வாதப் பிரதிவாதங்களே மக்கள் உள்ளங்களில் துவேஷ விதைகளைத் தூவி வருகின்றன. போதாக்குறைக்கு மெய்யாகவுமே தீப்பற்றி அனல் பறக்கிறது பம்பாயில்! அங்கு நடக்கும் மதக் கலவரங்களை அடக்க முடியாமல் ராணுவம் கூடத் தடுமாறுகிறது! நூற்றுக் கணக்கானவர் மடிந்தனர் எனில், குற்றுயிரும் கொலையுயிருமாக இன்னும் பல நூறு மக்கள்! அந்த மதக் கலவரங்களின் ஒரு கிளைக்கலவரமாகத் தமிழர் விரட்டி அடிக்கப்படுகின்றனர். பல்லாயிரக் கணக்கில் அகதிகள் தமிழகத்தில் வந்து குவிகின்றனர். ஆமதாபாத்திலும் கலவரங்கள் கடுமையாக வெடித்துள்ளன.

''கலவரங்களை அடக்கத் தெரியாத அரசு'' என்று மகாராஷ்டிர, குஜராத் அரசுகளுக்கு முத்திரை குத்தி விடுவது எளிது. ஆனால் வரலாறு காணாத அளவில் நடக்கும் பம்பாய்க் கலவரங்களுக்கு மூல காரணம் அயோத்தியில் நடந்த அக்கிரமம் என்பதை மறப்பதற்கில்லை.

பொங்கல் திருநாளில் நாம் சூரியனைத்தான் வழிபட்டோம். ஒரு பிம்பத்தையோ உருவத்தையோ அல்ல. அண்ட சாரசரத்தையெல்லாம் ஒரு நியதிக்குட்பட்டு ஆட்டிப் படைக்கும் ஒரு மகா சக்தியைத்தான் இயற்கை வழிபாட்டில் துதிக்கிறோம். அந்த மகா சக்திக்குத்தான் தியானத்துக்கு உதவும் நோக்கில் பல்வேறு வடிவங்களை உருவாக்கினோம். அவனைத் தூணிலும் துரும்பிலும் அணுவிலும் உள்ள சர்வ வியாபி என்றும், ஆதியும் அந்தமும் இல்லாதவன் என்றும் பெருமிதத்துடன் வர்ணிக்கிறோம்.

ஆதியும் அந்தமும் இல்லாதவனை, ''இந்த இடத்தில்தான் பிறந்தான்; இங்குதான் அவனுக்குக் கோயில் கட்ட வேண்டும்'' என்று கூறி, அங்குள்ள மசூதியை இடித்துவிட்டதன் பின் விளைவு, பல்வேறு பூதாகர வடிவங்கள் எடுத்து, நாட்டுக்குச் சொல்லிலடங்காத தீமைகளை ஏற்படுத்திவிட்டது. உள்நாட்டிலும் அயல் தேச உறவுகளிலும் புதிய புதிய பிரச்னைகள் ஏராளம்.

எனவேதான் அத்வானி போன்ற தலைவர்கள் - மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய மூத்த தலைவர்கள் - வோட்டுப் பிடிக்கும் குறுகிய நோக்கில் அடிப்படையான தவறுகளைச் செய்யும் போது, மனவேதனை பன்மடங்காகிறது. மதச் சார்புள்ள வெறியர்களின் பிடியில் அவர்கள் சிக்கி, பொம்மைகளாக ஆடுவதைக் காணப் பரிதாபமாகவும் இருக்கிறது.

பொறுப்புள்ள எதிர்க்கட்சி நாட்டுக்குத் தேவை. அந்த ஜனநாயகப் பணியை பி.ஜே.பியை விடச் சிறப்பாகச் செய்ய வேறு வலுவான கட்சியும் இங்கு இல்லை. எனவேதான் அத்வானியிடம், ''நாட்டின் மெய்யான பிரச்னைகள் பால் கவனத்தைத் திருப்புங்கள்'' என்று கேட்டுக் கொள்கிறோம். முக்கியமான பிரச்னை, நிச்சயமாக அயோத்தியில் கோயிலோ, மசூதியோ கட்டுவது அல்ல. வேறு எவை என்பது சொல்லித் தெரிய வேண்டியதுமில்லை. ஆக்கபூர்வமான சிறந்த யோசனைகளைக் கூறி, அந்தப் பிரச்னைகளுக்குப் பரிகாரம் தேடுவதே இன்று சிறந்த எதிர்க்கட்சியின் பணி.

பி.ஜே.பியின் வெற்றி, தேர்தல் களத்தில் நடக்க வேண்டும்; ரணகளத்தில் அல்ல. பி.ஜே.பி. ஆட்சி, வளமான இந்தியாவில் நடக்க வேண்டும்; சுடுகாட்டில் அல்ல.

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி



# தளதள தக்காளி! விளைச்சலில் புரட்சி!

**த**க்காளியின் விலை ஏறிவருவது இல்லத்தரசிகளுக்குப் பெரும் கவலையைத் தருகிறது. கிலோ தக்காளி ரூ. 12 லிருந்து ரூ. 16 வரை கூட விற்கிறது. விலை கொடுத்தாலும் நல்ல ரகமாக வாங்கத் தேடி அலைய வேண்டியிருக்கிறது.

தக்காளி உற்பத்தியில் புரட்சி செய்து இப்பிரச்னைக்குத் தீர்வு காண வழிகாட்டியிருக்கிறார் பாலசுப்ரமணியம். தமிழக அரசில் நல்ல பதவி வகித்து ஓய்வு பெற்ற இவருக்கு, இப்புரட்சியில் மனைவியும் ஹோம் சயன்ஸ் பட்டதாரியான மகள் காவேரியும் உதவியிருக்கிறார்கள்.

செங்கல்பட்டு ஜில்லா ஆலத்தூர் கிராமத்தில் (திருப்போரூர் சமீபம்) ஜே-1 ரகம் எனப்படும் தக்காளி விதை போட்டு இப் பரிசோதனையை 50 செண்ட் நிலத்தில் செய்து வெற்றி கண்ட இவர், இவ்வாண்டு ஒரு ஏக்கர் நிலத்தில் பயிரிட்டிருக்கிறார்.

**த**க்காளிச் செடிகளைக் குழந்தையைப் போலக் கருதித் தடவிக் கொடுத்தபடி இப் பசுமைப் புரட்சி எவ்வாறு சாத்தியமானது என்று விவரிக்கிறார்:

''ஜே-1 ரக தக்காளி விதைகள் சிம்ஸன் கம்பெனி நிர்வாகத்துக்கு உட்பட்ட 'ஜே' பண்ணையில் கிடைக்கிறது. மற்ற தக்காளி ரக விதைகள் 200 கிராம் 100 ரூபாய் என்றால் ஜே-1 ரகம் 100 கிராம் 700 ரூபாய். இந்தியன் எக்ஸ்பிரஸில் இந்தரகப் பயிர் பற்றிப் படித்து விட்டுப் பயிர் செய்ய முனைந்த போது, விதையின் அதிக விலை எனக்கும் தயக்க மூட்டியது.

''பரிசோதனை என்பதால் துணிந்து இறங்கினேன். விளைச்சல் பிரமிப்பூட்டியது.

''அக்டோபர்-நவம்பரில் பயிர் செய்யத் தொடங்கி பிப்ரவரி-மார்ச்சில் பழத்தை அறுவடை செய்வது இப்பயிருக்கு ஏற்ற காலம். குளிர்காலமாக இருப்பதால் செடியில் வளரும் பழங்கள் கீழே விழாமல் அதிகப் பலன் கிடைக்கும்.

''பணம் செலவழிக்கத் துணிச்சலும், பயிர் முறையைக் கவனமாகத் தெரிந்து கொண்டு, சரியாகச் செயல்படுத்துவதும் தான் முக்கியம்.

''ஒரு ஏக்கர் நிலத்துக்கு 100 கிராம் விதை வேண்டும். 10 டன் தக்காளி விளைச்சல் குறைவின்றிக் கிடைக்கும்.

''இந்த ரகப் பழங்கள் மிகப் பெரியவையாகவும் சதுரமான அமைப்பு உடையனவாகவும் இருக்கும். தோல் சற்றுக் கடினமானது. உள்ளே ஏராளமாக தக்காளிக் குழம்பு கனத்துடன் இருக்கும். சுவை மிக மிக

அதிகம். சாதாரணமாக வைத்தாலும் பழங்கள் 10 நாட்களுக்குக் கெடாமல் இருக்கும். தொக்கு, சாஸ் செய்ய இப்பழங்கள் மிக மிக ஏற்றவை.

''ஒரு ஏக்கர் நில விளைச்சலுக்கு மூன்று மாதத்தில் 13 ஆயிரம் ரூபாய் குறைந்த பட்ச நிகர லாபமாகக் கிடைக்கும். அதுவும் கிலோ தக்காளி ரூ. 2/- என்று விற்றாலே இந்த லாபம்!'' என்று கூறும் பாலசுப்ரமணியம் சாகுபடி முறைகளையும் விவரிக்கிறார் :

''விதையை ஒரு கிராம் செரசான் மருந்தோடு கலந்து விதை நேர்த்தி செய்ய வேண்டும். நாற்றங்கால் மேட்டுப் பாத்தியில் தயார் செய்ய வேண்டும்.

''ஒரு செ.மீ. ஆழத்திற்கு 10 செ.மீ. இடைவெளி விட்டு விதைக்க வேண்டும். உடன் ஒரு லிட்டர் நீருக்கு 2 கிராம் பவிஸ்டன் வீதம் கலந்து நாற்றங்காலை நனைத்து விட வேண்டும். பயிரிடும் நிலத்திற்கு 10 டன் கம்போஸ்ட் உரமிட்டு உழ வேண்டும். 85 கிலோ யூரியா, 470 கிலோ சூப்பர், 120 கிலோ பொட்டாஷ் இட வேண்டும். பாரசால் அமைத்துச் சரிவில் நாற்றுகளை ஓர் அடி இடைவெளியில் நட வேண்டும். வரிசைகள் இரண்டு அடி இடைவெளியில் அமைய வேண்டும். குச்சிகள் நட்டுச் செடிகளைக் கட்ட வேண்டும்.

''நட்ட 30 - ம் நாளும், 50 - ம் நாளும் 40 கிலோ யூரியாவை கம்போஸ்ட் உரத்துடன் கலந்து இட வேண்டும். மூன்று நாள் இடைவெளியில் நீர்ப் பாசனம் அவசியம். பூச்சி மருந்துகள் அவ்வப்போது தெளிப்பது அவசியம்.

''செலவும், உழைப்பும் அதிகம்தான். ஆனால் விளைச்சலைக் காணும் போது இதெல்லாம் சாதாரணமாகிவிடும்.

''ஜே-1 ரக விதை சென்னை தி.நகர் நடேசன் தெருவில் ''ரங்கா விதைகள்'' விற்பனைக் கேந்திரத்தில் குறைந்த அளவிலும் கிடைக்கிறது.

''வீட்டைச் சுற்றி செடி போட வசதியுள்ளவர்கள், ஃபிளாட்டில் வசித்தாலும் மொட்டை மாடியில் தொட்டி மரப்பெட்டி ஆகியவற்றில் செடி வளர்க்க வசதி உள்ளவர்கள் ஜே-1 தக்காளி விதை போட்டு அமோகமான தக்காளி விளைச்சலைக் காண முடியும். அக்கம் பக்கத்தில் உள்ளவர்களுக்கும் குறைந்த விலைக்குக் கொடுத்து உதவ முடியும்!'' என்கிறார், பாலசுப்ரமணியம்.

பேட்டி : நாயகன்




பாண்டியராஜன் : நிகழ்ச்சி களின் சுவாரசியம் இவர் ஏற்றுள்ள பாத்திரத்திற்கு மட்டுமின்றி இவருக்கும் கொண்டு வருவது, வரவேற்க வேண்டிய திருப்பம்.

எஸ். எஸ். சந்திரன் : கல்யாண புரோக்கர் காதல்வயப்படக் கூடாதா என்ன? படுகிறார். சரளாவை மணந்து கொள்ள இவர் படும் பாடும், அதற்காக இவர் போடும் சிற்பி வேடமும் ஏற்படுத்துவது அரங்கு நிறைந்த சிரிப்பை.

நரசிம்மன் : அதிக வசனம் இல்லை. வந்து போவதோ சில நிமிடங்கள்தான். என்றாலும், சந்திரன் படைத்த பளிங்குச் சிலையாக அசையாமல் அமர்ந்திருக்க வேண்டிய கட்டாயச் சூழ்நிலையில், அப்படிச் செய்ய முடியாமல் அவ்வப்போது படும் அவஸ்தைகளும், உணர்ச்சிகளே இல்லாத - மரத்துப் போன முகத் தோற்றமும் நினைத்து நினைத்துச் சிரிக்கத் தூண்டுபவை.

ராதாரவி : எந்த வகையிலும் கதையோட்டத்திற்குப் பொருந்தாமல் வலியத் திணிக்கப்பட்டிருக்கும் பாத்திரப் படைப்பு. ரசிக்கும்படியான பாத்திரப் படைப்பும் அல்ல. அதனால் ராதாரவியின் ஆற்றல் வீணாகிறது.

மூர்த்தி - நாகேஷ் : முறையே, பெண்ணைப் பெற்றவர் - பிள்ளையைப் பெற்றவர். அனுபவம் கொண்டு தரும் நயமே அலாதிதான்.

பல்லவி - கனகா : கவை சேர்க்கப் பயன்படும் அலங்காரப் பின்னணிகள்.

கோபு - பாபு : சென்னை சபா அரங்குகளில் இடம்பெறும் 'சிரிப்புத் தோரண' நாடகங்களை நினைவுபடுத்தும் வசனங்கள். அங்கங்கே மிருதுவாகக் கொஞ்சம் அரசியல் நெடி... பொடித் தூவலாகப் 'பச்சை' வண்ணம்.

ராமநாராயணன் : இவர் திரைக்கதை - இயக்கத்தில் இடம்பெறுவது நிமிடத்திற்கு ஒரு சிரிப்பு.

- சி. ஆர். கே.






சுத்தம் வேண்டாமா?

சந்திரனுக்குச் செல்பவர்களே!

## அட, அப்படியா!

!! ஒரு நாளில் சராசரியாய் ஒரு பாக்கெட் சிகரெட் பிடிக்கும் நபர், ஒரு வாரத்தில் உள்ளிழுக்கும் நிகோடினின் அளவு 400 மில்லி கிராம். இந்த அளவை ஒரே சமயத்தில் ஒருவர் உட்கொண்டால் அந்தக் கணமே மரணம்தான்.

!! ஒளியில் வானவில்லின் எல்லா வண்ணங்களும் உள்ளன. இந்த நிறங்களுக்கும் அப்பால் புற ஊதா கதிர்களும் இன்ஃப்ரா ரெட் கதிர்களும் இருக்கின்றன. இவற்றைக் கண்ணால் காண முடியாது. ஆனால் இவற்றின் உஷ்ணத்தை நாம் உணர முடியும்.

!! வயிறு முட்ட ரத்தத்தை உறிஞ்சிய ஒரு கொசு தன் உடல் எடையைப் போல் இரு மடங்கு எடையைச் சுமந்து கொண்டு பறக்கிறது.

!! வாசனைகளை நுகரும் ஆற்றலை மிக அதிகமாகக் கொண்ட உயிரினம் ஆண் பட்டுப் புழுதான். சுமார் ஏழு மைல் தூரத்தில் பெண் பட்டுப் புழு இருப்பதை அது நுகர்ந்தே அறிந்து கொள்ளும்.

!! வியாழ கிரகமானது, நமது சூரிய மண்டலத்தில் உள்ள மற்றக் கிரகங்கள், சந்திரன்கள் யாவையும் ஒன்று சேர்த்தால் கிடைக்கக்கூடிய அளவை விட இரண்டரை மடங்கு பெரியது!

!! சூரியனையும் சந்திரனையும் அடுத்து மிக அதிக ஒளியுடன் திகழும் கிரகம் வெள்ளி. சில நேரங்களில் இதைப் பகலில் கூட பார்க்கலாம்.

!! சந்திரனின் பரப்பில் நிசப்தமே நிலவுகிறது. அங்கு காற்று மண்டலமே இல்லாததால் ஒலியால் பயணம் செய்யவே முடியாது.

!! பூமியின் எடை சுமார் 6,600,000,000,000,000,000,000 டன் எனக் கணித்தார் நியூட்டன். அவர் கணிப்பு சரிதான் என்பது ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு நிரூபிக்கப்பட்டது.

!! டைனமோ, டிரான்ஸ்ஃபார்மர், டைரக்ட் கரண்ட் மோட்டார் ஆகிய மூன்றுமே ஒரே ஆண்டில் மைகேல் ஃபாரடேயால் உருவாக்கப்பட்டன. 1831 இல் அந்த பிரிட்டிஷ் விஞ்ஞானி இவற்றை உருவாக்கிய போது அவருக்கு வயது 39.

!! கத்திகளைச் சாணை பிடிக்கப் பயன்படுத்தப்படும் கற்களை விட நான்கு மடங்கு உறுதியானவை வைரங்கள்.

!! ஒரு அவுன்ஸ் எண்ணெயை எட்டு ஏக்கர் பரப்பளவில் மெலிதாகப் பரப்பலாம்.

!! மிக விலை உயர்ந்த பெட்ரோலிய எண்ணெய் Watch Oil.

!! அணு ஆராய்ச்சிக்குப் பயன்படுத்தப்படும் கனநீர் (Heavy Water) பார்ப்பதற்குச் சாதாரண தண்ணீரைப் போலவே இருக்கும். இதன் விலை : ஒரு பைண்ட் அளவு (அதாவது 568 கியூபிக் சென்டிமீட்டர்) 10,000 டாலர்.

தொகுப்பு : உதய்லால்



"ஆபரேஷனுக்கப்புறமும் வயிறு எரியுது டாக்டர்!"

"ஃபீஸைக் கட்டின கொஞ்ச நாளைக்கு அப்படித் தான் இருக்கும். அப்புறம் சரியாயிடும்!"

- வேதபுரி எஸ். ரமேஷ்



* சாலை மறித்துத் தொழுகை

# மது ஒழிப்புக் கூட்டத்தில் கைகலப்பு!

**சார்மினார் சாலை :**

●● 'அயோத்தியா' விளைவாகப் பழைய ஹைதராபாத் நகரில் இனக் கலவரம் ஏற்பட்ட போது, ஒரு வாரத்தில் அடக்கப்பட்டது போலீஸ் இலாகாவின் சிரகக்கு ஒரு வெற்றிச் சிறகு. சுதந்திர உரிமை அளித்து, அரசியல் தலையீடு இன்றி போலீஸை செயல்பட விட்டதே காரணம். இந்தச் சாதனைக்கு 'டெல்லி' கூட முதல்வர் விஜயபாஸ்கர ரெட்டிக்கு ஷொட்டு கொடுத்தது. அந்த பாராட்டுப் பூரிப்பு அடங்குமுன்னரே அடிலாபாத், நைஸாமாபாத் முதலிய நான்கு மாவட்டங்களில் மீண்டும் கலவரம் தலைதூக்கி இருக்கிறது. துப்பாக்கிச் சூடு இருந்தும் வெறிச் சூடு தணியவில்லை. ஒரு மாவட்டத்தில் இதற்கு அடிப்படை Eve teasing தானாம்!

●● அயோத்தியாவில் 'தரிசன' அனுமதிக்கு எதிராக பாபர் மசூதி நமாஸ் கோரி இங்குள்ள 300 முஸ்லிம் இளைஞர்கள் புதியதோர் எதிர்ப்புத் தெரிவித்தனர். அபிட்ஸ் சாலையில் (மவுண்ட் ரோடுக்கு நிகர்) குறுக்கே வெள்ளியன்று நமாஸ் நடத்தினார்கள். போக்குவரத்து தடையுற்றது. தொழுகை முடிந்ததும் போலீஸ் லத்தி சார்ஜ்; கைது. ஆயினும் இதுபோன்ற வீதித் தொழுகை இன்னோர் இடத்திலும் நடந்தது!

●● ஆந்திரத் தலைநகரில், ஈநாடு ஆசிரியர் ராமோஜி ராவ், ஆந்திர சமூகத்தில் ஏற்பட்டுள்ள மதுவிலக்குக் கோரும் சமூக விழிப்பை ஆதரித்து, அரசியல் கலப்பற்ற ஒரு கூட்டத்தைச் சர்வ கட்சித் தலைவர்களுடன் நடத்தினார். குடி ஒழிப்பிற்கு உதவும் கரங்கள் நீட்டும் ஆளுனர் ஜி. கிருஷ்ணகாந்த், முதல்வர் விஜயபாஸ்கர ரெட்டி ஆகியோருடன் அதில் என்.டி..ஆரும் கலந்து கொண்டார்.

'கலால் வருமானம் பொன் முட்டையிடும் வாத்து' என்று முன்பு தமது ஆட்சியில் கூறிய என்.டி..ஆர்., இப்போது எதிர் வசனம் பேசினார். ''மதுவிலக்குக் கொண்டு வர அரசு தாமதிப்பதேன்? நிதி வேண்டும் என்பதற்காக விபசாரிகளுக்கும் கொள்ளைக்காரர்களுக்கும் வரிவிதித்து லைசென்ஸ் தர முடியுமா?'' என்றார் வீராவேசமாக. ஆளுனருக்கு, இப்படி அவர் அரசியல் நோக்கில் கண்ணியக் குறைவாகப் பேசியது பிடிக்கவில்லை. மனைவியுடன் 'வாக் அவுட்' செய்தார். முதல்வரும் அவரைப் பின்தொடர்ந்தார். கடைசியில் காங்கிரஸ் - தெலுங்கு தேச ஊழியர்கள் மோதல்; சாராய எதிர்ப்புக் கூட்டத்தில் கள்ளுக் கடை போலக் கைகலப்பு. அய்யோ தேவுடா!

* மதுவிலக்கு - சர்வகட்சிக் கூட்டத்தில் தலைவர்கள்



– சுபஸ்ரீ

முகம் கொடுத்துப் பேசாமல்... விறைத்துக் கொண்டு திரிகிற மகள். தாயை எதிரியாக நினைத்து, மனம் கொதித்துப் போய்ச் சீறுகிற மகள்.

சீரழிந்த செங்கல் சுமந்து... சீப்பட்ட குடும்பம், மறுபடியும் தலைதூக்கிப் பெருமையோடு நிமிர்ந்து நிற்க ஒரு வழி கிடைக்கிறது என்றால்... அது சும்மாவா? தெய்வமாகப் பார்த்துத் திறந்து வைக்கிற வாசலை, இந்த மூதேவி மூடிப் போட வேண்டும் என்கிறாளே...

இதெல்லாம் என்ன? ஏன் இவளுக்கு இப்படி மதி போகிறது? உருப்படுவதற்கு ஒரு வழி கிடைத்தால்... அதைப் பற்றிக் கொள்ள வேண்டும் என்கிற அறிவு வேண்டாமா?

கூடப் பிறந்த அக்காளுக்குச் சக்களத்தியாக இருப்பதில்... என்ன இழிவு? என்ன கேவலம்? என்ன கௌரவக் குறைச்சல்?

அக்கா பிள்ளை வேறு. இவள் பிள்ளை வேறா? தன் பிள்ளை போல, தன் குடும்பம் போல நினைத்துக் கொள்வதில் என்ன கேடு வந்தது?

இந்தப் பொட்டைக் கழுதையின் மூளையில் என்ன புற்று புறப்பட்டிருக்கிறதோ...?

வயிற்றில் சுமந்து, மார்பில் போட்டுச் சீராட்டி, ரத்தத்தைப் பாலாக்கி ஊட்டி வளர்த்த தாய், மகளுக்குத் துரோகம் செய்வாளா? செய்ய மனம் வருமா?

செய்வதாக நினைத்துச் சிலிர்த்துக் கொண்டு அலைகிறாளே... சண்டைக் கோழியாகக் கொண்டை ரோமத்தைத் தூக்கிக் கொண்டு அலைகிறாளே...

இன்னும் சனீஸ்வரன் ஏறிக் கொண்டு கூத்தாடுகிறானோ... இந்தக் குடும்பம் கெட்டழிந்து சீரழியத்தான் போகுதோ...

வேலாயிக்குக் கோபமும் பயமும் மனதை வாட்டி வதைத்தது. முள்ளு முள்ளாகக் குத்துகிற நினைவுகள். ரோஷம் கெட்டுப் போய் சொர்ணத்திடம் வலியப் பேசுகிற போது... என்ன பேச்சுப் பேசி விட்டாள், பாதகத்தி!

''பெத்த புள்ளை எலும்பைத் தின்னு, பெரிய பொழைப்பு பொழைக்க நெனைச்சுருக்கே. எலும்பைத் தின்னுருவே. ஆனா, பெரிய பொழைப்பு பொழைச்சுக்கிட மாட்டே...''

அந்த வார்த்தைகள் இந்த அம்மாவை எவ்வளவு அரட்டி விட்டது? மயிலைக் கண்ட பாம்பாக ஒடுங்கிப் போனாளே...

மகள் எலும்பைப் பார்க்கவா, இத்தனை காலம் இத்தனை சீரழிவில் சாகாமல் கிடந்தாள்? நல்ல காலம் இப்ப வந்து விடாதா, அப்ப வந்து விடாதா என்ற நப்பாசையில் அல்லவா இத்தனை காலம் உயிரைப் பிடித்துக் கொண்டு கிடக்கிறாள்.

நல்ல காலம் வரவே வராதா? வராமலேயே போய் விடுமா? வருகிற நல்ல காலத்தைக் கூட இவளது குறைமதியால் குலைத்து விடுவாளோ...

திமிர், திமிர், உடம்பெல்லாம் திமிர். அப்பன் திமிர் அப்படியே ரத்தத்தில் வளர்ந்து கிடக்கிறது.

அவரும் அப்படித்தான். கர்வத்திற்காகவே வைப்பாட்டிகளை வைத்துக் கொண்டார். வில் வண்டிகளைக் கட்டிக் கொண்டு, ஊர் ஊராகத் திரிந்தார். திமிரினாலேயே பல பேரோடு வம்பு வழக்குகளை வளர்த்துக் கொண்டு, கோர்ட்டுக்கு அலைந்து திரிந்தார்.

அழிவைப் பற்றிக் கருதாமல், வீம்புக்காக, கர்வத்துடன் காரியங்கள் செய்கிறவர். அதே குணம்தான் இவளிடம். யாருக்கும் அடங்குவதில்லை. யாரிடமும் மடங்குவதில்லை. எவரிடமும் மதிப்பு மரியாதையே வைப்பதில்லை.

நானே உசத்தி என்கிற மமதை.

இருக்கும் நிலைமையைப் பாராமல்... ஆகாயத்திலேயே அகந்தையுடன் அலைகிற தன்மை... எல்லாரும் தன் கால் தூசிக்குச் சமானம் என்ற நினைப்பு...

சாயங்காலம் மூன்று மணியிருக்கும். வீட்டு வாசலில் சைக்கிள் சத்தம். 'கொரட் கொரட்'டென்கிற சத்தத்தைக் கேட்டாலே தெரிந்து விடும், இது நாராயணசாமிதான்.

எட்டிப் பார்த்தாள். அவன்தான்.

அதிசயமாகச் சட்டை போட்டிருந்தான். அரைக் கை சட்டை. வழுக்கை விழுந்த நரைத்த தலைக்கும் அந்தச் சட்டைக்கும் ஒத்து வரவேயில்லை.

ஏதோ சோளக் காட்டுப் பொம்மைக்கு மாட்டியது போல, பொருத்தமில்லாமல் இருந்தது.

வேர்த்து, விறுவிறுத்துப் போய் வந்தான்...

''என்னய்யா...'' என்றாள் வேலாயி.



''ஒண்ணுமில்லேக்கா...''

''சாப்டுறியா? சோறு வைக்கட்டா?''

''வேண்டாம்க்கா. சாப்பிட்டுட்டுத் தான் சைக்கிள் எடுத்தேன்...''

''பெட்டம்மா எப்படியிருக்கா?''

''இருக்கா.''

''புள்ளைக?''

''நல்லாயிருக்காக...''

''கோடைப் பருத்தி விதை ஊனி யாச்சா?''

''நேத்துத்தான்... அந்த வேலை முடிஞ் சது.''

''நேரா... நம்ம வீட்டுக்குத்தான் வாரியா?''

''இல்லே... நம்ம நாட்டாமை வெங்க டாசலம் அண்ணாச்சியைப் போய்ப் பாத் துட்டு வாரேன்.''

''என்ன விஷயம்?''

''நம்ம சொர்ணம், முனியசாமி வீட்டுக் குப் போனாளாமே?''

''என்னமோ, தெரியலை.''

''முனியசாமி வீட்டுக்கு எதுக்குப் போறா?''

''யாரு, நம்ம முனியசாமி வீட்டுக்கா? அங்க போக மாட்டா. போனதுனாலே என்ன வந்துருது?''

''அப்படியில்லேக்கா... இந்த நேரத் துலே அவன் வீட்டுக்கு இவளுக்கு என்ன ஜோலி? முனியசாமி ஒரு எளிய சாதிக் காரன். அவனையெல்லாம் ஒரு மனுசனா கவே மதிக்க மாட்டா. அப்பேர்ப்பட்டவள், இந்தச் சமயத்துலே அவன் வீட்டுக்கு வலிய தேடிப் போறான்னா... அதுலே விஷயமில் லாம இருக்குமா?''

''நீ சொல்றதைப் பாத்தா... ஏதோ இருக் கும்னுதான் தோணுது.''

''கட்டாயமா இருக்குக்கா... முனிய சாமியோட பேரன் சிமிண்டாபீஸ்லே வேலை பாக்கான். அவன், ஏதோ கட்சி யிலே வீட்ரா இருக்கான்... அவன் சப்போர்ட்டை வைச்சுக்கிட்டு, இவ ஏதோ தந்திரம் பண்ணிக்கிட்டிருக்காள்னு நெனைக்கேன்.''

''அப்படியா... நெனைக்கே? நேத்து... அவகிட்டே பேசிக்கிட்டிருந்தேன்... எனும் பைத்தான் பாக்கப் போறீகன்னு... பேசுறா.''

''அதெல்லாம்... நம்மளை அரட்டுற தந்திரம். பயங்காட்டி, நம்மளைக் கலங் கடிக்க... திகைக்க வைச்சுட்டு, வேறு ஏதோ செய்யணும்னு கமுக்கமாத் திட்டம் போடு றான்னு நெனைக்கேன்...''

''இதென்ன.. பெரிய குண்டைத் தூக்கிப் போடுறே? போயும் போயும்... எளிய சாதிக்காரப் பயலோட ஓடியா போயி டுவா? நம்ம குடும்பத்தோட மானமே போயிருமே... கஞ்சிக்கு வழியத்துப் போய்க் கிடந்தாலும், நம்ம குடும்பத்துக்கு ஒரு மரியாதை இருக்கு. அதையும் போட்டு ஒடைச்சிருவாளா...?''

''அதான்... நானும் போய் வெங்கடா சலம் அண்ணாச்சியைப் பாத்துப் பேசிட்டு வந்தேன். அவரு, முனியசாமியைக் கண்கா ணிக்க ஏற்பாடு செய்றதாகச் சொல்லியிருக் காரு.''

''தம்பி... ஒங்கிட்டே ஒரு விஷயம் சொல்லணும்.''

''என்ன அக்கா?''

''எப்பவும் இல்லாத அதிசயமா... ஒரு நா... காயிதம் எழுதிப் போட்டா. யாருக்கு எழுதுனான்னு தெரியலை.''

''அப்ப... நா நெனைச்சது சரியாத்தான் இருக்கும்னு நெனைக்கேன்.''

வேலாயிக்குப் பகீர் என்றது. மனசுக் குள் சிலீர் என்று ஒரு வெறுமை. எதிரில் வரப் போகிற பயங்கரத்தை நினைத்து... மனசே நடுங்கியது.

இப்படியும் ஒரு கேவலம் வந்து சேருமா? போயும் போயும் இப்படி ஒரு அசிங்கமா? நம்ம வீட்டிலே பழைய கஞ்சி யைக் குடித்து விட்டு, சாணிக் கூடை சுமந்த ஓர் அடிமையின் பேரனுடனா... இவள் ஓடிப் போகப் போகிறாள்?

அடப் பாதகத்தி... குருட்டு வெறியிலே இப்படியும் காரியம் செய்யத் துணிந்து விடுவாயா?

ஐய்யோ... இது என்ன கொடுமை! எத்தனை தலைமுறை கழிஞ்சாலும்.. இந்தக் கேவலம் அழியாதே...

நடுங்கும் கண்களோடு மூத்த மரு மகனைப் பார்த்தாள். அவன் செய்வதறியாத குழப்பத்துடன் மருண்டான். பார்வையை எதிர்கொள்ள முடியாமல்... தவிர்த்தான். தவித்தான்.

வேலாயிக்குள் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

பேர் பெற்று வாழ்ந்த குடும்பம், கஞ்சிக்கு வழியற்றுக் கிடப்பதையாவது காலக் கொடுமை என்று சகித்துக் கொள்ள லாம். விதிக் கொடுமை என்று விசாரப் பட்டுக் கொள்ளலாம். குடும்பத்தின் மானத் தையே குழிதோண்டிப் புதைக்கிற காரி யத்தை - ஏழேழு தலைமுறைக்கும் நீள்கிற அவமானத்தை - எப்படிச் சகித்துக் கொள் வது? எவ்வாறு பொறுத்துக் கொள்வது?

இதைச் சகித்துக் கொண்டு உயிர் வாழ ணுமா? அது என்ன மானங்கெட்ட பிழைப்பு...

இவளை இப்படியே விடக் கூடாது. அடக்கி வைக்க வேண்டும். வீட்டிற்குள் முடக்கிப் போட வேண்டும். வேலைக்கும் போக வேண்டாம். ஒன்றுக்கும் போக வேண்டாம்.

குரங்குக் குட்டியை மனம் போல ஆட விட்டு விடக் கூடாது.

''தம்பி... எனக்கொரு யோசனை...''

''என்னக்கா...?''

''இந்தக் கழுதையை இப்படியே வுட்டுறக் கூடாது.''

''ம்.''

''வுட்டுட்டா... தீராக் கேவலம் தேடி வந்து சேந்துரும்.''

''ம்.''

''இன்னிக்கு வரட்டும். கழுதையை வூட்டுக்குள்ளே போட்டுப் பூட்டிப் போடு வோம்... அப்பத்தான், அதுவும் அடங் கும்.''

''இதுவும் சரியாத்தான் இருக்கு.''

''அது மட்டுமில்லே... மாசி மாசத் துலே முதல்லே வார முகூர்த்தத்துலே தாலி யைக் கட்டிப் போடணும்.''

''சரிக்கா... அப்ப... இன்னிக்கு நா இங் கேயே இருந்துரட்டா...''

''இரு...''

**ம**ணி ஆறுக்கும் மேலாகி விட்டது. வர வேண்டிய நேரம்தான். இன்னும் சொர்ணம் வரவில்லை. வேலாயிக்கு முள் மேல் இருப்பது போலிருந்தது. மனம் கிடந்து 'திக்திக்'கென்று அடித்துக் கொண்டது.

'என்னாச்சோ, என்னாச்சோ...' என்று மனம் தவித்தது. கண்ட கண்ட விதத்தில் மனம் கற்பனை செய்து கொண்டு, அரண்டு கிடந்தது.

அவளுக்கு ஒன்றும் ஓடவில்லை. நாராயணசாமியுடன் பேசக் கூட மன மில்லை. என்னத்தைப் பேச என்று வெறுப் பாக இருந்தது.

வீட்டுக்குள் புயலாக ஓடி வந்தாள், ராசாத்தி.

''என்னடி... அவ எங்க?''

ராசாத்தி ஒன்றும் சொல்லத் தோன்றாமல், மலங்க மலங்க விழித்தாள். முகமெல்லாம் அப்பியிருந்த பய பீதி. வாய் அசைகிறது. வார்த்தை வரவில்லை.

வேலாயிக்குள் திகில். அடிவயிற்றில் ஏதோ சங்கடம். மனம் செயல்படாமல் 'திக்' கென்று நின்று கொண்டது.

''என்னடி, என்னடி?'' என்று பரபரத்தாள். கத்தியது போல கூச்சலாகக் கேட்டாள். ராசாத்தி மிரண்டு போய்க் கிடந்தாள். அடைந்த அதிர்ச்சியிலிருந்து இன்னும் மீளா தவளைப் போலத் தவித்தாள்.

திக்கித் திணறிப் போய் அவள் சொல்லி முடித்த போது, நாராயணசாமி கிரகித்துக் கொண்ட விஷயம், இதுதான்.

வேலை முடிந்து, நகரத்தைக் கடந்து வருகிற போது... தார் ரோட்டில் ஒரு வெள்ளைக் கார் இவர்களைக் கடந்து நின்று, கதவைத் திறந்தது. சொர்ணத்தை இழுத்து உள்ளே போட்டவுடன், கார் சிட்டாகப் பறந்து விட்டது.

இவர்கள் கொஞ்ச தூரம் கத்திக் கொண்டே துரத்தினார்கள். பயனில்லை.

வேலாயி தலையில் அடித்துக் கொண்டு அழுது புலம்பினாள்.

''அய்யய்யோ... பாதகத்தீ...! குடும்பத்துத் தலையிலே தீயை வைச்சுட்டியே... குலத்துக்கே குழியைத் தோண்டிட்டியே...''

என்று மார்பில் அடித்துக் கொண்டே கதறினாள். அவள் முகம் கோணிக் கொண்டு போயிற்று.

நாராயணசாமிக்கு முகம் வெளுத்து விட்டது.

நெஞ்சில் வந்து மோதிய அதிர்ச்சி, அவனையே பறித்துக் கொண்டு ஓடுவது போலிருந்தது. மூளையே மரத்துப் போன மாதிரி இருந்தது. எதுவும் செய்யவும் தோன்றாமல், சொல்லவும் தோன்றாமல், இருட்டிக் கொண்டு வந்தது.

நாட்டாண்மையைப் பார்த்துப் பேச வேண்டும் என்று நாராயணசாமி ஓடினான்.

'வெங்கடாசலத்திடம் சொல்லி... முனியசாமி பேரன் மேல் அவசரமாகக் கேஸ் கொடுக்கணும். அவனை உடனடியாக மடக்கணும். அப்பத்தான் பறவையைப் பிடிக்க முடியும்...' என்று மனசுக்குள் குருட்டு எண்ணம் ஓடியது. அவன் தெருவில் பதற்றத்துடன் நடந்தான்.

(தொடரும்)



மனைவி : எதுக்காகச் சீட்டு குலுக்கிப் போட்டுப் பார்க்கிறீங்க?

கணவன் : இந்த வாரத்துக்கான வார பலன்ல எனக்கு ஒவ்வொரு பத்திரிகையிலயும் ஒவ்வொரு விதமா எழுதியிருக்கு! எது சரியா இருக்கும்னு தெரிஞ்சுக்கத்தான்...!

– ப. விஜயபாலன்



''வயிற்றெரிச்சலா இருக்குய்யா!''

''ஏன்?''

''நேத்துவரை நமக்கு மாமூல் கொடுத்துக்கிட்டு இருந்த கேடி கண்ணாயிரம் இன்னிக்குப் பெரிய அரசியல் தலைவரானதால நாம அவருக்கு மாமூல் கொடுக்க வேண்டியதா இருக்கே, அதான்!''

– தஞ்சைத் தரணியன்

''இருந்தாலும் அந்த டிராஃபிக் கான்ஸ்டபிளுக்கு ரொம்பத்தான் பேராசை!''

''ஏன், என்ன ஆச்சு...?''

''சைக்கிள் ஓட்டிக்கிட்டுப் போன என்கிட்ட டிரைவிங் லைசென்ஸ் இல்லைன்னு காரணம் காட்டிப் பத்து ரூபாய் பிடுங்கிட்டாரு...!''

– வி. கி. குமார்



# அம்'மா'

அந்த வீட்டை அரவணைக்கிற மாதிரி பின்பக்கமிருந்து மாமரம் ஒன்று குடைபிடித் திருந்தது. அதன் பட்டைகள் உதிர்ந்து வய தாகி விட்டதை அறிவித்தது. கிளைகளில் இடம்கொள்ளாமல் பூக்களும் பிஞ்சுகளும் ஒட்டிக் கொண்டிருந்தன. துளிர்கள் இன்ன மும் மொட்டு விட்டுக் கொண்டிருந்தன.

மரத்தடியில் கயிற்றுக் கட்டில் கிடந்தது. பெரியவர் பன்னீர்செல்வம் அதில் அன் னாந்து படுத்திருந்தார். வெறும் கட்டில் முதுகை உறுத்தியது பற்றி அவர் கவலைப் படவில்லை. பூக்களின் மணத்தை நுகர்ந்து, தேனீக்களின் ரீங்காரத்தில் லயித்துப் போயிருந்தார்.

அவரைப் பொறுத்தவரை அந்த இடம் ஒரு சொர்க்கம். அங்கு கிடைக்கும் நிழலும் காற்றும் பரமசுகம். இலைகளின் சலசலப்பு அவருக்கு மனதிற்குள் மத்தாப்புக் கொளுத் தும். ஊஞ்சலாட்டும்.

பெரியவர் கண்களை மூடிக் கொண்டு நித்திரைக்குப் போன போது, தெருப் பசங் கள் ஓடி வந்து, ''தாத்தா... தாத்தா!'' என் றனர்.

தலையைத் தூக்கிப் பார்க்க, ''எப்போ தாத்தா இது பழுக்கும்?''

''இன்னும் ரெண்டு மாசம் பொறுத்துக்குங்க!''

''அதோ...! அந்த கிளையில் அணில் கடிச்ச பழம்!'' என ஒருவன் கல்லெறிய,

''ஏய்... ஏய்... வேணாண்டா! அடிக்காதடா!'' என்று கெஞ் சினார்.

''ப்ளீஸ் தாத்தா... ஒரே ஒரு மாங்காய்!''

''நானே பறித்துத் தருகிறேன். கல் லெறியக் கூடாது!''

''ஏன்?''

''இது என் சம்சாரம்!''

''சம்சாரமா... ஹாஹ்ஹா! அப்போ இதைத்தான் கட்டிக்கிட்டீங்களா?''

''இவ்ளோ பெரிய சம்சாரமா...!'' பசங் கள் கெக்கலித்து விட்டு ஓடிப் போக, பன்னீர் செல்வத்திற்கு தம் சம்சாரத்தின் முகம் நிழ லாடியது.

அந்த நாட்களில் அவளுக்குச் செடி களின் மேல் கொள்ளைப் பிரியம். கண்ணில் படுவதையெல்லாம் வாங்கி விடுவாள். பிறந்த வீட்டிலிருந்து அவள் சீதனம் எதுவும் கொண்டு வரவில்லை - இந்த மாங்கன்றைத் தவிர.

'என்னால் வேறு எதுவும் முடியலேங்க!'

'கேட்டேனா...?'

'கேட்கலை. இருந்தாலும் கூட மனசு நோகுது. நீங்கள் வேண்டுமானால் பார்த்துக் கொண்டேயிருங்கள், இந்த கன்று பெரிதாகிக் காய்த்து, வட்டியும் முதலுமாய் வருமானம் தரப் போகிறது!'

கனகம் அதன் மேல் பாசத்தைக் கொட்டி வளர்க்க ஆரம்பித்தாள். பாத்திகட்டி, உர மிட்டு, பூச்சி மருந்து தெளிப்பாள். ஆடு கடிக் காமல் வேலி போடுவாள். காலையில் கண் விழிப்பதே அந்த மாவின் மேல்தான்.

வறட்சி நாட்களில் கூட மைல் கணக்காய் நடந்து தண்ணீர் சுமந்து வந்து ஊற்றுவாள். அவளது ஆசையைப் போலவே செடியும் வேகமாய் வளர ஆரம்பித்தது. கிளை விட்டது.

அது எப்போ பூக்கும்... எப்போ காய்க் கும் என ஏங்குவாள்.

ஆனால் காய்த்தபின் சாப்பிடக் கூடாதோ? சாப்பிட மனசு வரவில்லை. நன் றாக முற்றட்டும் என்று காக்க ஆரம்பித்தாள்.

இந்த காத்திருப்பு ஒரு இன்பம். விரும் பினது கண் எதிரே இருக்க, இதோ... நாளை, நாளை மறுநாள் என்று ஆசைகளை அடக்கிக் கொள்வதற்கு ஒரு பக்குவம் வேண்டும். அடக்க அடக்க ஆர்வம் அதிகமாகவே செய் யும். உடன் அடக்கு அடக்கு என ஆளுமை அதிகாரம் பண்ணும்.

காய் முற்றின பின்பாவது சாப்பிட் டிருக்கக் கூடாதோ? ம்கூம். பறித்துப் பானை யில் வைக்கோல் சுற்றிப் பழுக்க வைத்தாள்.

நான்காம் நாள், 'பழுத்திருச்சுங்க!' என்று சின்னப் பிள்ளை போல குதூகலித்தாள். அந்தச் சமயத்தில் அவள் கர்ப்பம். முதல்

என். சி. மோகன்தாஸ்

பையன் வெளியூரில் படித்துக் கொண்டிருந் தான்.

'எனக்கு ஆசையாய் இருக்குங்க!'

'எடுத்துச் சாப்பிடேன்!'



'இல்லை. முதல் பழம் நீங்கதான் சாப் பிடணும்.'

'சரி, கொடு. நான் ஒரு கடி கடிச்சுட்டுத் தரேன்!'

'வேண்டாம் வேண்டாம்! அவசரப்படா தீங்க. முதல் பழமாயிற்றே! அப்படியே சாப் பிடலாமா...? கூடாது. சாமிக்குப் படைத்து விட்டுப் பிறகு சாப்பிடுவோம்' என்று இன்னமும் ஒத்தி வைத்தாள். அந்த ஒத்திவைப்பு எதற்கோ தெரியவில்லை.

மரத்தின் வேரில் சாமி படங்களை வைத்து, பழங்களை வரிசையாய் அடுக்கி, 'இருங்க, குளிச்சுட்டு புதுப் புடைவை மாத்

திக்கிட்டு வரேன்' என்று குளத்திற்குப் போனவள் -

போனவள் உருப்படியாய் வீடு திரும்ப வில்லை. கால் வழுக்கி விழுந்து, மிதக்கிற தகவல் மட்டுமே வந்தது.

பன்னீருக்கு மனைவியின் பிரிவில் அழுகை வந்ததை விட ஆத்திரம் வந்ததே அதிகம். பாவி மகள்! எத்தனை ஆசை ஆசை யாய் வளர்த்திருப்பாள்! காய்த்ததும் -

இது நான் வைத்தது, நான் வளர்த்தது, நான்தான் முதலில் சாப்பிடுவேன் என்று சாப் பிட்டிருக்கக் கூடாது...?

கடைசி வரை சாப்பிடாமல் ஒத்திப் போட்டது எதற்காக? காலமெல்லாம் நான் கலங்க வேண்டும், கண்ணீர் வடிக்க வேண் டும் என்பதற்காகவா?

அவள் போன பின்பு மரம் ஏகமாய்க் காய்க்கிறது. ஆனால் என்ன பிரயோஜனம்? அவரும் தொடுவதில்லை. அது புளிப்பா இனிப்பா என்று கூட அவருக்கும் தெரியாது. காய்ப்பதெல்லாம் ஊருக்குத்தான்!

**ம**கன் ரவிக்குமார் தாய்க்குத் தப்பாமல் பிறந்தவன். அவனுக்கும் செடி கொடிகள் என் றால் உயிர்.

படிக்கும் போதும் சரி, வெளியூரில் வேலை பார்த்த போதும் சரி, ஊருக்கு வரும் போதெல்லாம் புதிது புதிதாய்ச் செடிகள் கொண்டு வந்து வைப்பான்.

தாயைத் தொழ வேண்டுமென்றால் மாமரத்தைத் தொழுவான். அந்த தொழுகை ரொம்ப நாட்கள் நீடிக்கவில்லை. எல்லாம் திருமணம் வரைதான். மனைவி வந்ததும் தாய் மறந்து போயிற்று; அல்லது தாயையோ



"உங்க பையனும் உங்களைப் போலவே பெயின்டரா வந்து காண்ட்ராக்ட் எடுத்து நல்லா சம்பாதிப்பான்."

"எப்படி சொல்றீங்க?"

"பாருங்களேன், நவம்பருக்குப் பிறகு, என்னன்னு கேட்டா இப்பவே 'டிஸ்டெம் பர்'ங்கிறான்!"

\- கே. எஸ். பாலகிருஷ்ணன்.

மரத்தையோ நினைக்க அவனுக்கு நேரமிருக் கவில்லை.

அவனுக்கு உத்தியோக மாற்றம் வந்து, அங்கேயே செட்டிலான போது, மாவின் நிலைமை இன்னும் கூட மோசமாயிற்று.

வீட்டிற்கு வந்ததும் ரஞ்சனி செய்த முதற் காரியம் அந்த மாவின் கிளைகளை வெட்டச் சொன்னதுதான்.

பன்னீர் செல்வம் பதறிப் போய், "ஏம்மா... எதற்காக வெட்டச் சொல் கிறாய்...?"

"உள்ளே வெளிச்சம் பத்தலை."

"லைட் போட்டுக் கொள்ளலாமே!"

"பகலிலும் லைட் எரிந்தால் கரண்ட் பில் என்னாகிறது! தண்டச் செலவு!"

"கிளைகளில் காய் இருக்கேம்மா!"

"நான் என்ன, எல்லாவற்றையுமா வெட்டச் சொல்கிறேன்? பாக்கி நிறைய இருக்கே! அதுவுமில்லாமல் காய்கள் இருந்து என்ன பிரயோஜனம்? எல்லாமே ஓசியில் தானே போகிறது?"

பிடிவாதமாய் வெட்டுவதற்கு உத்தர விட்டு விட்டாள். பெரியவருக்கு மட்டு மில்லை ரவிக்குமாருக்குக் கூட அவளை எதிர்க்க முடியாமல் போயிற்று.

பிரச்னை அத்தோடு முடிந்து விட வில்லை.

அடுத்த வாரத்திலேயே ரஞ்சனி, "வீடெல்லாம் ஒரே எறும்பா மேயுது," என்று புலம்ப ஆரம்பித்தாள். "எல்லாத்துக் கும் காரணம் இந்த சனியன்தான்! இதால் பெரும் தொல்லை!"

"அப்பாவுக்காகக் கொஞ்சம் பொறுத்துக் கோயேன் ரஞ்சனி!"

"இன்னும் எவ்ளோ பொறுக்க முடியும்? எங்கு பார்த்தாலும் குப்பை! இலையும் தழையும் உதிர்ந்து எவரால் சுத்தம் பண்ண முடிகிறது?"

"உனக்கு முடியலேன்னா ஒரு வேலைக் காரி வெச்சுக்கோயேன்!"

"ஆமாம்... இந்த மரம் தருகிற வரு வாய்க்காக வேலைக்காரிக்கு வேறு அழ ணுமா? பேசாமல் படர்ந்திருக்கிற கிளை களையெல்லாம் வெட்டச் சொல்லுங்கள்!"

"வேண்டாம் ரஞ்சி. ப்ளீஸ்... சொன் னாக் கேள். அப்பா வருத்தப்படுவார்."

"அதையெல்லாம் பார்த்தால் முடி யுமா... நகருங்க!"

**கி**ளைகள் ஒவ்வொன்றாய்ச் சரியச் சரிய, பெரியவரின் நாடி நரம்புகளும் வெட்டுபட ஆரம்பித்தன. தம் உடல், பொருள், ஆவி எல்லாமே சரிவதாய்த் தளர்ந்து போனார்.

அதன் பலனாய் அவர் படுக்கையில். அதுவும் அந்த மாவினடியிலேயே!

ரஞ்சனியின் ஆசை அத்துடன் அடங்கவில்லை. ''ஏங்க... அக்கம் பக்கமெல்லாம் பூமி என்ன விலை விற்கிறது தெரியுமா...?''

''என்ன வித்தால் என்னவாம்?''

''என்னங்க பொறுப்பில்லாமல் பேசறீங்க...? அடுத்த தெருவுல இரவுண்டு ரெண்டு லட்சத்துக்கு வித்திருக்காங்க.''

''அதுக்காக...?''

''நாமும் ஏன் விற்கக் கூடாது?''

''நம்கிட்டே ஏது பூமி...?''

''ஏனில்லை? இந்த மா தண்டமாத் தானே இருக்கு? வெட்டிப் பறிக்க எறிஞ்சுட்டு ஃபிளாட்டாவது கட்டி வாடகைக்கு விடலாமே!''

''அபத்தமாய்ப் பேசாதே. இது காய்க்கிற மரம்!''

''ஆகா! வருஷத்துக்கு எவ்ளோ காய்க்கும்? ஒழுங்காய்ப் பாதுகாத்து விற்றால் ஆயிரம் ரூபாய் தேறுமா? அது போதுமா? அதில் ஃபிளாட் கட்டி வாடகைக்கு விடலாம். ஒரு ஃபிளாட் குறைந்தது ஆயிரம் ரூபாய் போகும். எங்கப்பாட்டருந்து பணம் வாங்கித் தருகிறேன். பேசாமல் கட்ட ஆரம்பிச்சுருங்க. தேவைப்பட்டால் லோன் போட்டுக்கலாம்!''

மனைவியின் நச்சரிப்பில் - ஏன் அப்படி செய்யக் கூடாது என்று அவனுக்கும் தோன்றிற்று. அப்பாதான் பழம் பஞ்சாங்கமாய் அம்மாவையும் மரத்தையும் கட்டிக் கொண்டு அழுகிறார் என்றால் நாமும் அப்படியே காலம் தள்ள வேண்டுமா? மரம் இருக்கிற வரை இங்கே பிரச்னைதான்.

அம்மா வளர்த்தால் அதற்காக மாவே அம்மாவாகி விட முடியுமா...? விஞ்ஞானம் வளர்ந்து விட்ட இந்தக் காலத்தில் இப்படி ஒரு பைத்தியக்கார நம்பிக்கையா...?''

''என்ன சொல்றீங்க?''

''எதுக்கும் அப்பாட்ட ஒரு வார்த்தை கேட்டுட்டு...''

''வேண்டாம். எதுக்கு? கேட்டால் மறுப்பார். சபிப்பார். இளைக்கே கூச்சல் போட்டவர், இதற்கு நிச்சயம் சம்மதிக்க மாட்டார்!''

''அப்புறம், அவருக்குத் தெரியாமல் எப்படி?''

''பெரிசை அப்புறப்படுத்துங்க.''

''எங்கே?''

''ஏன் எங்கள் தலைவரைக் கைது செய் என ஊர்வலம் போகிறார்கள்?''

'''தலைவரை விடுதலை செய்' என்று பெரிய பெரிய போஸ்டர்கள் அடித்து விட்டார்கள். கைது செய்யாவிடில் போஸ்டர்கள் வேஸ்ட். அதற்காகத்தான்!''

- தாப்புடு.




''அதுதான் ராத்திரி பகலாய் இருமிக்கிட்டிருக்கே! அழைச்சுப் போய் ஆஸ்பத்திரியில் கிடத்துங்க. ஒரு வாரத்தில் மரத்தை உண்டு இல்லைன்னு பண்ணி வேலையை ஆரம்பிச்சுரலாம்.''

''இது பாவமில்லையா...?''

''பாவமாவது புண்ணியமாவது! சொன்னபடி செய்ங்க!''

**ப**த்து நாட்களுக்கு மேல் பெரியவர் ஆஸ்பத்திரியிலிருந்தார். இருமல் பூரணமாகக் குணமாகி, ஒரு புதிய தென்பே அவரிடம் வந்திருந்தது. வீட்டுக்கு அழைத்துச் செல்ல வந்திருந்த மகனுக்கு நன்றி சொன்னார்.

''என்னப்பா இதெல்லாம்?'' என்றான் ரவிக்குமார்.

''இல்லைடா... இனிமேல் மாமரத்தை நன்றாகக் கவனித்துக் கொள்ளலாமில்லையா? அப்படியொரு தென்பு ஆஸ்பத்திரிக்கு வந்ததாலேதானே வந்தது?''

''ஆமாம்... ஆமாம்....'' என்ற ரவிக்குமார் ஓடிக் கொண்டிருந்த ஆட்டோவுக்குள்ளிருந்து பார்வையை வெளியே செலுத்தினான்.

அதற்குள் வீடு வந்திருந்தது. பெரியவர் உற்சாகத்தோடு இறங்கி மாமரம் இருந்த திசையில் ஆவலோடு பார்த்தார்.

அங்கே மரம் இருந்த இடத்தில் ஆட்கள் புதிய ஃபிளாட்டுக்கு அஸ்திவாரம் தோண்டிக் கொண்டிருந்தார்கள்.

''ஐயோ... கனகம்...'' என்று பதறிய பெரியவர், அப்படியே தரையில் அடியற்றுச் சாய்ந்தார்.

அப்பா சற்று அதட்டலாகவே கேட்டார்.

''முடிவா என்னதான் சொல்றே மீரா?''

அவர் முகம் கோபத்தில் சிவந்திருந்தது.

''நீ சின்னப் பொண்ணு இல்ல மீரா... நல்லா யோசிச்சுப் பாரு... நான் உன் நல்லதுக்குத்தான் சொல்றேன். எவ்வளவு நாளைக்கு இப்படியே இருந்துட முடியும்...?''

''நல்லா யோசிச்சுத்தான் சொல்றேன்... நீங்களே உங்க பொண்ணைப் புரிஞ்சுக்க லேன்னா எப்படி...?''

''என் பொண்ணுங்கறதாலதான் நான் சொல்றேன்... ஆம்பிளை கொஞ்சம் அப்படி, இப்படித்தான் இருப்பான். நீதான் அட்ஜஸ்ட் பண்ணிட்டு இருக்கணும். உன்

# புதிய சுதந்திரம்

அம்மா எவ்வளவு பொறுமைசாலி... அவளுக்குப் பொண்ணாப் பொறந்துட்டு இப்படி அட்டகாசம் பண்றியே...!''

மீராவுக்கு எரிச்சல் வந்தது.

அப்பாவும் அடிப்படையில் ஓர் ஆம்பிளைதான். பெண்களின் அவஸ்தை இவருக்கு எங்கே புரியப் போகிறது?

''நல்லா யோசி மீரா...!''

''ப்ச்... திரும்பத் திரும்ப அதையே சொல்ல வேண்டாம். நான் நல்லா யோசிச்சுத்தான் முடிவெடுத்துருக்கேன். ஒரு வருஷமில்ல, ரெண்டு வருஷமில்லே... எட்டு வருஷம்! உங்க அருமை மாப்பிள்ளைகிட்ட அவ்வளவு அவஸ்தைப் பட்டுருக்கேன்! எவ்ளோ ஹிம்சை... எவ்வளவு நாள்தான் பொறுத்துக்கறது?''

மீராவின் கண்களில் நீர் திரண்டது.

இப்பொழுது நினைத்தால் கூட உடம்பு நடுங்குகிறது.

ராஜசேகர் ஒரு மிருகம்! எவ்வளவு அவமானங்கள்; எவ்வளவு ஆபாசங்கள்!

அப்பாவாயிருந்தாலும் அவரும் ஓர் ஆண். ஓர் ஆணிடம் சொல்ல முடியாத ஆபாச அவமானங்கள்.

அம்மாவுக்குப் புரிந்தது.

இருப்பினும் அம்மா அப்பாவின் நிழல்.

அப்பாவை மீற மாட்டாள்.

''புருஷனை டைவர்ஸ் பண்ணிட்டு என்ன பண்ணப் போறே?''

யோசித்தாள்.

முதலில் இவனிடமிருந்து தப்பிக்க வேண்டும். அடுத்த நடவடிக்கை அடுத்த நிகழ்ச்சி.

''வேலை பாக்குற திமிர்தானே இப்படி பண்ணச் சொல்லுது!'''

அப்பா குரூரமாய்க் கேட்டார்.

''இந்த வேலை புதுசா வரலை - எட்டு வருஷமாப் பாத்துட்டுத்தான் இருக்கேன். என்னைக்கோ புருஷனைப் பிரிஞ்சு வந்துருக்கலாம். ஆனால் வரலை! ரொம்ப யோசித்துத்தான் இப்ப வெளில வந்துருக்கேன். ஏம்பா, உங்க பொண்ணு நான். என்னோட நல்லது உங்களுக்கு முக்கியமாப் படலையா...?''

''எதுடி நல்லது? இப்படி புருஷனை விட்டுட்டு வந்துட்டா, ஊர்ல நாலு பேர் என் மூஞ்சிலதான்டி காறித் துப்புவான்!''

''யாருப்பா அந்த நாலு பேரு? பாதி ராத்திரினு பாக்காம கழுத்தைப் புடிச்சு புருஷன் வெளில தள்ளினப்ப எங்கப்பா போயிருந்தாங்க அந்த நாலு பேரு? உடம்பு முழுக்க பெல்ட்டால வீசினானே, அப்ப எங்க போனாங்க நீங்க சொல்ற நாலு பேரும்!''

மதுமிதா

''ஒத்துக்கறேன்... அவன் அயோக்கியன்தான்... ஆனா ஒரு பொம்பிளை நினைச்சா எது வேணா செய்யலாம்... அவனை நல்லவனா மாத்தலாம். உனக்கு யோக்கியதை இல்லே; நாய்க் குட்டி மாதிரி உன்னை வளைய வர்றாப்பல நீ பண்ணியிருக்கணும்; அதுக்கு யோக்கியதை இல்லே...!''

**யோ**க்கியதை இருந்தது.

எவ்வளவோ முயற்சிகள்.

ஆனால் ராஜசேகர் அடிப்படையில் ஒரு வக்ர புத்திக்காரன். இவளின் அத்தனை முயற்சிகளும் அவனை மேலும் முரடனாகவே ஆக்கின.

நிறைய விஷயங்கள் அப்பாவுக்குத் தெரியாது. தெரியப்படுத்த யத்தனித்த போதெல்லாம் அப்பா நழுவிக் கொண்டார்.

மகளாயிருக்கட்டும் அல்லது மனைவியாக இருக்கட்டும். பெண் எப்போதும் பெண்தான்!

''அப்பா... நான் முடிவாச் சொல்றேன்... டைவர்ஸ் வழக்கை வாபஸ் வாங்க மாட்டேன். உங்களுக்கு அவமானம்னு நினைச்சதாலதான் நான் தனியா வீடு பாத்துட்டு இருக்கேன். தயவு செய்து போங்கப்பா... நீங்களும் என்னை ஹிம்சைப் படுத்தாதீங்க...!''

மீரா கையெடுத்துக் கும்பிட்டாள்.

அப்பா அவளையே முறைத்துப் பார்த்தார்.

பின் சடக்கென எழுந்து கொண்டார்.



**மே**ஜையில் தலை சாய்த்திருந்த வளைக் கயல்விழி மெலிதாகத் தட்டினாள்.

''என்ன மீரா? ஃபீவரா? ரொம்ப டல்லாயிருக்கே...?''

''இல்லப்பா... அப்பா வந்து கத்திட்டுப் போனாரு...!''

''நல்ல மனுஷனடி உன் அப்பா! இந்த நேரத்துல உனக்கு அனுசரணையா இருக்க வேண்டியவரு. இப்படி தொந்தரவு பண்ணிட்டு இருக்கார்!''

''எனக்கு வாச்ச ரெண்டு ஆம்பிளையும் இப்படித்தான் இருக்கானுங்க!''

''சரி... எழுந்து முகம் கழுவிக் கொள்...!''

முகம் கழுவினாள்.

சற்று தெம்பு வந்தது.

அவள் முன் அலுவலக ஃபைல்கள் குவிந்திருந்தன.

மெல்ல வேலையில் மூழ்கினாள்.

**வா**சலில் நின்றிருந்த அம்மாவைப் பார்த்ததும் இவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''என்னம்மா... இங்கே ஏன் வந்தே...!''

அதற்குள் வீட்டுக்கார அம்மாள் வெளியே வந்தாள்.

''மீரா, உங்க அம்மாவாமே! எவ்வளவோ சொல்லிட்டேன். உள்ளே வந்து உக்காரவே மாட்டேங்கறா... அப்பலேர்ந்து திண்ணைலேயே நின்னுட்டு இருக்கா... கதவைத் திறந்து உள்ளே கூப்பிட்டுக்கிட்டுப் போ...!''

மீரா அவசரமாய் மாடியேறினாள்.

அம்மா ஒரு பெரிய சூட்கேஸை உள்ளே கொண்டு வந்து வைத்தாள்.

மீராவுக்குக் கொஞ்சம் அதிர்ச்சியாகத் தானிருந்தது.

''என்ன இது பொட்டி?''

''என்னதுதான். நான் உன்னோடேயே இருக்கப் போறேன்டி!''

''என்னது! என்னோடயா? காலைல அப்பா ஆபீசுக்கு வந்து குதி குதின்னு குதிச்சுட்டுப் போனாரு...?''

''தெரியும். வந்து வீட்லயும் கோவமாக் கத்தினாரு! அதுக்கப்புறம் நான் எடுத்த முடிவுதான் இது!''

''வேண்டாம்மா! எனக்காக அப்பாவைப் பகைச்சுக்காதே...!''

''இங்க பாரு மீரா... இந்த நேரத்துலதான் நான் உன் பக்கத்துல இருக்கணும்... நீ உடைஞ்சு போயிடக் கூடாது. உன்னை மாதிரி நல்லா யோசிச்சுத்தான் நானும் இந்த முடிவை எடுத்திருக்கேன். நீ எனக்குச் சோறு போடுவே இல்லே?''

''என்னம்மா அப்படி கேட்டுட்டே...!'' என்ற மீரா அம்மாவுடைய கையைப் பற்றி உள் அறைக்கு அழைத்துப் போனாள்.

---




## பேசும் ரெப்ரிஜிரேட்டர்!

**பு**துவிதமான கண்டுபிடிப்புகளில் தன் கவனத்தைச் செலுத்தும் ஜப்பானியர் பேசும் ரெப்ரிஜிரேட்டர் ஒன்றைத் தயாரித்துள்ளனர். கதவுகளைச் சரியாக மூடாமல் விட்டு விட்டால் அதை உடனடியாகச் சொல்கிறது. சரியாக, முறையோடு தன்னைப் பயன்படுத்தத் தவறினால் அதையும் சொல்கிறது. அந்த ரெப்ரிஜிரேட்டரை இரண்டாயிரம் முறை திறந்து மூடியவுடன் Clear the contents என்று தன்னைச் சுத்தப்படுத்த உரிமையாளருக்கு உத்தரவு இடுகின்றது. மின்சாரத்தைச் சிக்கனமாக உபயோகிக்கவும் உதவி செய்கிறதாம்.

- என். சண்முகம்

## 'சூட்கேஸில்' கார்!

**ஸை**க்கிளை விடச் சின்னஞ்சிறியதாக, ஒரு பையில் அடைக்கும் அளவில் செய்ய முனைந்து ஜப்பானியர்கள் வெற்றி பெற்று இருக்கிறார்கள்.

ஆம்; காரையே சூட்கேஸ் ஒன்றில் அடக்கி விட முயற்சி செய்து வருகிறார்கள்.

சூட்கேஸைத் திறந்தால், அதில் சக்கரங்கள், ஸ்டியரிங், கதவு என்று காரின் பாகங்கள் பத்திரமாக, ஒழுங்காக வைக்கப்பட்டுள்ளன. அவற்றையெல்லாம் கவனமாகப் பொருத்தினால், பந்தயத்தில் கலந்து கொள்ளும் காரை உருவாக்கிவிடலாம்!

சூட்கேஸின் எடை, கார் பாகங்களோடு சேர்த்து 66 கிலோ இருக்கிறது!

- ஆதாரம் : 'லைன்'

தகவல் : சேலம் சக்திக்கொடி





* ''மகரம்''

# மகரம்: தொகுப்புகளின் சிகரம்!

**க**ல்கி வெள்ளி விழாவின் போது ஏராளமான சிறுகதையாசிரியர்கள் நாவலாசிரியர்கள் கட்டுரையாளர்களை ஒரே இடத்தில் ஒருசேரப் பார்க்கிறார் மகரம். இத்தனை பேரையும் சேர்த்து ஒரே புத்தகத்தில் எழுத வைத்தால்...? என்ற எண்ணம் எழுகிறது. அதன் விளைவாக உருவானது தான் ''எழுதுவது எப்படி?'' என்ற தொகுப்பு நூல் வரிசை. வெளியிட்டவர் பழனியப்ப செட்டியார்.

**வ**ள்ளலார் - காந்தி விழா நடக்கிறது. வழக்கம் போல். ''காந்தி வழிக் கதைகள்'' என்று பலரையும் எழுதச் செய்து ஒரு தொகுப்பு வெளியிட்டால் என்ன என்ற எண்ணம் பிறக்கிறது. மகரம் செயல்படுகிறார். நூலை வெளியிட காந்தி நினைவு அறக்கட்டளை முன்வருகிறது. அந்த ஆண்டின் மிகச் சிறந்த நூல் பரிசு பெறுகிறது.

**அ**ண்மையில் மகரத்தைத் தொகுப்பாசிரியராகக் கொண்டு வானதி பதிப்பகம் வெளியிட்டுள்ள 'வானதி சிறப்புச் சிறுகதைகள்', நான்கு தொகுதிகளில் 101 சிறுகதைகளைக் கொண்டிருக்கிறது. வானதி பதிப்பகம் தொடங்கிய 1955 முதல் '90 வரை வெளியாகி நூல் வடிவம் பெறாதவை என்று ஒரு எல்லை வகுத்துக் கொண்டார்கள். இதனாலேயே சில முக்கியமான எழுத்தாளர்களின் கதைகள் இடம்பெற முடியவில்லை. காரணம் ஏற்கெனவே அவை தொகுதிகளில் இடம்பெற்று விட்டதுதான். எனவே கால எல்லையை '91 வரை என்று நீட்டித்தார்கள். சில தீபாவளி மலர்க் கதைகள் கை கொடுத்து, அந்த இடைவெளியை நிரப்பின. அப்படியும் சில பிரபலங்களின் கதைகள் இல்லை. இதற்குத் தொகுப்பாளர் பொறுப்பில்லை. சம்பந்தப்பட்ட எழுத்தாளர்களால் கதை தர முடியாத நிலைதான். உயிரோடு உள்ள எழுத்தாளர்களின் கதைகளை மட்டுமே கேட்டுப் பெறுவது என்ற நிலையும் ஒரு காரணம்.

**சி**றுகதையாசிரியர்களைத் தேர்வு செய்வதில் கல்கியில் வெளியாகும் 'பாலம்' பகுதி கூட உதவியிருக்கிறது. கணிசமான சிறுகதைகளை எழுதியுள்ள ஒருவர் தம் சிறுகதைகளை யாராவது நூலாக வெளியிடுவார்களா என்று கேட்டிருந்தார். அவரையும் பிடித்து இந்தத் தொகுதியில் சேர்த்தார் மகரம்.

இந்தத் தொகுதிகளில் இருபத்தைந்து சதவிகிதம் இடம்பெற்றிருப்பவர்கள் பெண் எழுத்தாளர்கள் என்பது ஒரு முக்கியமான செய்தி. எந்தத் தொகுதிக்குமே கதையோ கட்டுரையோ தரும் வழக்கமில்லாத ஒரு பிரமுகரின் சிறுகதையும் இந்தத் தொகுதியில் உள்ளது. அந்தப் பிரமுகர் குமுதம் ஆசிரியர் எஸ்.ஏ.பி.

தொகுப்பாசிரியர் என்கிற முறையில், பல விமர்சகர்களின் சுட்டுவிரல் மகரத்தின் பக்கம் பாயும்தான். 'அவரை ஏன் விட்டாய், இவரை எந்தத் தகுதியில் சேர்த்தாய்?' என்றெல்லாம் கேட்கலாம்தான். எனினும் இப்படி நூற்றியோரு பேர்களோடு தொடர்பு கொண்டு தொகுப்பைக் கொண்டு வருவது, சிரமப்படுகிறவர்களுக்கு மட்டுமே புரியும். வானதி சிறுகதைகள் தொகுப்புப் போல் இனி நிறைய வெளிவர வேண்டும் என்கிற எதிர்பார்ப்பை உண்டாக்கியிருக்கிறார்கள். அதுவும் பெரிய வெற்றி.

– பாலன் பூங்குழலி

*வானதி சிறப்புச் சிறுகதைகள். நான்கு தொகுதிகள். ஒவ்வொன்றும் விலை ரூ 40. - வானதி பதிப்பகம், சென்னை - 17.*

---



''படம் அவ்வளவு போரா?''
''அதையேன் கேட்கிறே, போலீஸ் ஜீப் எப்படா வரும்னு ஆகிப் போச்சு!''

– ஞா. ஞானமுத்து

# இந்திய கால்பந்தாட்டக் குழுவினர்

வண்ணப்படங்கள் : சாரி

* இந்திய குழுவினர் :
(இந்திய அணி இக்குழுவிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும்.)

* சாந்தகுமார்

* யூசப் கான் (கோல் கீப்பர்)

# அன்புள்ள அருண் கண்மணி,

மூன்று பறவைகள் பற்றி எத்தனை அழகாய் எழுதியிருக்காய்?!

ஜெட் பிளேன் மாதிரி 'டைவ்' அடிச்ச பச்சைப் பறவை நிச்சயம் Bee Eater ஆகத்தான் இருக்கும். முதல் பறவை 'வுட் பெக்கர்' இல்லை. நீ வரைஞ்ச படத்தைப் பார்த்தால் ஹூபூ (Hoopooe) மாதிரி இருக்கிறது. வுட் பெக்கர் (மரம் கொத்தி) தரையில் நடக்காது. மரத்தில் ஒட்டிக் கொண்டு ஊர்ந்து, அலகால் (மூக்கு இல்லை; அலகு = beak) கொத்திக் கொத்திப் பூச்சிகளைத் தேடும். அதன் தலையில் தொப்பி போல் ஒரு சிவப்புத் திட்டு இருக்கும். இந்தப் பறவைகளை சலீம் அலி எழுதின 'இந்தியப் பறவைகள்' புத்தகத்தைப் பார்த்து நீ அடையாளம் தெரிஞ்சுக்கலாம். அதில் எல்லா பறவைகள் படமும் இருக்கும்.

நீயும் பப்லுவும் பார்த்த ஹூபூ, கோழி, பீ ஈட்டர் மூணுமே வெவ்வேறு விதமா இரை தேடிக்கிட்டிருந்தன. அதற்கு வசதியா அலகும், காலும், உடம்பும், இறகும் அமைஞ்சிருக்கு பார்த்தியா!

இப்போ அந்த அதிசயத் தகவல் :

பல பறவைகள் எறும்புகளைப் பிடிச்சு தங்கள் உடம்பு மேலே விட்டுக்குமாம்! விஞ்ஞானிகள் இதைக் கண்டுபிடிச்சிருக்காங்க. கடிக்காத ரக எறும்புகளை மட்டுமே தேடிப் பிடிச்சு இப்படிச் செய்யுமாம். சில பறவைகள் எறும்புக் கூட்டத்து மேலேயே போய்ப் படுத்துப் புரளுமாம்! - தங்கள் உடம்பில் எறும்புகளை ஏற்றிக்கறதுக்காக!

இப்படி ஏன் செய்கின்றன தெரியுமோ? எறும்புகளுடைய உடம்பிலேயிருந்து ஃபார்மிக் ஆசிட் அல்லது வேறு சில திரவங்கள் வெளியேறும். இந்தத் திரவங்கள் பறவைகளின் உடம்பில் படும் போது மற்ற பூச்சிகளை நெருங்க விடாமல் தடுக்கும். அது மட்டுமில்லை.... பறவைகளுடைய உடம்பில் எண்ணெய் சுரக்கும்னு எழுதியிருந்தேன் இல்லையா? Uropygial glands என்கிற சுரப்பிகள்தான் இந்த எண்ணெயை உற்பத்தி செய்யும். எறும்புகள் வெளிப்படுத்தற திரவங்கள் இந்த எண்ணெயோட சேர்ந்து பறவைகளுக்குக் கூடுதலாக உதவும்.

இன்னும் வேடிக்கை என்ன தெரியுமோ? சில பறவைகள், சிகரெட் துண்டு, பாச்சை உருண்டை, ஆரஞ்சு தோலி மாதிரி



நெடியுடைய பொருள்களை எடுத்து உடம்பைத் தேய்ச்சுக்குமாம்! இந்தப் பொருள்களின் நெடி எறும்பு திரவத்தின் வாசனையைப் போலவே இருக்கிறதாலே இப்படிச் செய்யுமாம்!

பப்லுவும் நீயும் எண்ணெய் தேய்ச்சுக் குளிக்க என்ன ரகளை பண்ணுறீங்க! இந்தப் பறவைகள் தங்கள் உடம்பை எப்படியெல்லாம் கவனித்துக் கொள்கின்றன, பார்!

பிரியமுடன்,

அன்பு அத்தை

## சேதி கேட்டோ!



# இழுத்து மூடப்பட்ட கேரளக் கருவூலம்!

கேரள அரகக்குச் சொந்தமான கருவூலம் அண்மையில் ஒருநாள் இழுத்து மூடப்பட்டது. கேரள அரகக்கான தனது பட்டுவாடாவையெல்லாம் நிறுத்தி வைத்துள்ளதாக ரிசர்வ் வங்கி அறிவித்ததே இதற்குக் காரணம். கேரள அரக ரிசர்வ் வங்கியிடம் ஓவர்டிராப்ட்டாக வாங்கிய 74.87 கோடி ரூபாய் முழுவதையும் அடைத்தால்தான் மேற்கொண்டு பட்டுவாடா செய்வோம் என ரிசர்வ் வங்கி கூறிவிட்டது.

இதுவரை இப்படி ஒரு நிலைமை கேரளாவில் ஏற்பட்டதே கிடையாது. இதனால் அன்றாடச் செலவுகள் ஒன்றும் நடக்க முடியாத நிலைமை ஏற்படும் என்பதால், கேரள அரக மத்திய அரகடன் தொடர்பு கொண்டது. தங்களுக்கு மத்திய அரக தர வேண்டிய 128.64 கோடி ரூபாயை உடனே அனுப்பித் தரும்படி கேட்டது. மத்திய அரகம் அந்தத் தொகையைக் கொடுத்து உதவியது. எப்படி? கேரள அரக மத்திய அரகக்குக் கொடுக்க வேண்டிய 49.46 கோடி ரூபாயை எடுத்துக் கொண்டு மீதி 79.18 கோடி ரூபாயை மட்டுமே ரிசர்வ் வங்கியில் கட்டியது. ஆக, ரிசர்வ் வங்கிக்குக் கேரள அரக கொடுக்க வேண்டிய ஓவர்டிராப்ட் தொகை போக கேரள அரசின் கணக்கில் 4.31 கோடி ரூபாய் மட்டுமே உள்ளது.

இது பற்றி முதல்வர் கருணாகரன் கூறும் போது, ''கேரளாவில் பெய்த பேய் மழையில் பாதிக்கப்பட்டவர்களுக்கு நிவாரண உதவி செய்ததில் பெரும் தொகை செலவாகி விட்டது. அதிலிருந்து மீளுவதற்குள் அயோத்தி கலவரத்தால் இங்கு பலரும் பாதிக்கப்பட்டனர். அவர்களுக்கும் அரக உதவ வேண்டியதாகி விட்டது. அதனால் தான் இந்த நெருக்கடி ஏற்பட்டது. மற்றபடி எதிர்க்கட்சிகள் சொல்வது போல அரசின் கையாலாகாத்தனத்தை இது காட்டவில்லை. சில சந்தர்ப்பங்களில் எல்லா அரககளுக்கும் இப்படியொரு பொருளாதார நெருக்கடி ஏற்படுவதுண்டு!'' எனக் கூறினார்.

எல்லாம் சரிதான், ஆனால் பல்வேறு அரககளுக்குத்தான் இப்படி பொருளாதார நெருக்கடி அவ்வப்போது தோன்றுகிறதே தவிர, அரசியல்வாதிகளுக்கு ஏற்படுவதாகத் தெரியவில்லையே!

– எஸ். எஸ். மணி



''சார், ஒரு சந்தேகம்?''

''வெரிகுட், இப்படி சந்தேகம் கேட்டுக்கிட்டேயிருந்தாத்தான் அறிவு விருத்தி ஆகும். என்ன சந்தேகம், கேளு!''

'''இஞ்சி இடுப்பழகி'ன்னா என்ன சார்?''

– ப. கணேஷ்.

# பாப்கார்ன் கனவுகள்

## 14

"நான் சினிமாவில் நடிக் கட்டுமா?"

குரலின் தவிப்பு இருளில் தெரிய லக்ஷ்மிநாராயணன் கேட்கிறான். விஜயலக்ஷ்மியின் முகத்தில் புன் சிரிப்பு, வெட்கத்தில் நெளிகிறது.

"என்ன?"

"ஒண்ணுமில்லையே."

"சும்மா சொல்லு."

"இல்லே. எங்க அத்தை கூட சொன்னா. நீங்க அழகாயிருக்கேள். சினிமாவிலே நடிக்கலாம்னா."

"உம்."

"பெரியப்பா பொண்ணு மைத் ரேயி கூட சொல்லியிருக்கா."

"உம்..."

"அழகாத்தான் இருக்கேள்."

விஜயலக்ஷ்மியின் தலையணை யில் லக்ஷ்மிநாராயணன் சேர்ந்து கொள்கிறான். கல்கத்தா வெள்ளிக் கோப்பை அலமாரியில் தெரிகிறது. மங்கிய விளக்கொளியில் ஆசையில் விரல்கள் பின்னி, மல்லாக்க மேலே பார்த்து, பேச்சு தொடர்கிறது.

"அதுக்கில்லே. கம்பீரமா இருக் கேளான்னு கேட்டேன்."

"உம்."

"ஹீரோவா நடிக்கலாமோ?"

"ஓ. இப்பல்லாம் யார் யாரோ நடிக்கிறாளே."

"அப்ப நடிக்கலாங்கறே?"

"தாராளமா."

"நல்லா யோசிச்சுச் சொல்லு. வாழ்க்கைப் பிரச்னை. கௌதமி, ரேவதி கூடல்லாம் நான் டூயட் பாட வேண்டியிருக்கும்."

"அய்யய்யோ."

"பரவாயில்லையா?"

"நடிப்புத்தானே? அப்ப பரவா யில்லே."

"முதல்ல ரெண்டாயிரம் ரூபாய்க்கு பேண்ட், சட்டை எடுக்க ணும்."

"ரெண்டாயிரம் ரூபாய்க்கா?"

"ஆமாம். சினிமான்னா சும் மாவா? ஒரு ஜில்பாஸ் காட்டினாத் தான் தமிழனை மதிப்பாங்க."

"ஜில்பாஸ்னா?"

"பந்தா, ஷோ."

"உம்."

"விஜயலக்ஷ்மி..."

"என்ன?"

"சின்ன வயசிலேர்ந்தே நான் பெரிய ஆளா வரப் போறேன்னு எனக்குத் தோணும்."

"உம்."



''முயற்சி பண்ணட்டுமா?''

''ஓ!''

''கடைசி வரைக்கும் நீ எனக்கு ஆறுதலாயிருந்து நடத்திக் கொடுக்கணும்.''

''உம்.''

''சத்தியமா?''

லக்ஷ்மிநாராயணன் கையை நீட்டுகிறான். விஜயலக்ஷ்மி அன்புடன் அதைப் பற்றிக் கொள்கிறாள். தலையணையில் முகத்தை முகம் பார்க்கிறது. லக்ஷ்மி நாராயணன் நடித்து வரக்கூடிய அந்த முதல் படத்தை விஜயலக்ஷ்மிக்கு உடனேயே பார்க்க வேண்டும் போலிருக்கிறது.

தரையில் விழுந்த ஒரு ரூபாய் நாணயம் போல் பிரகாசிக்கும் சூரியன்.

மொட்டை மாடியில் பனியன் உலர்த்தி மாமனார் திரும்புகிறார். எதிர் வீட்டில் குனிந்து நிமிர்ந்து உடற்பயிற்சி செய்கிற லக்ஷ்மிநாராயணன் அவர் கண்களில் படுகிறான். வேண்டாத அத்தனை வேலைகளையும் வெகு அக்கறையாய்ச் செய்கிற அவனைப் பற்றி கோவிலுக்குப் போகிற வழியில் வீட்டுச் சொந்தக்கார நவகோடி அம்மாளிடம் மாமனாரின் அதிகாலை அங்கலாய்ப்பு. கோவில் முடிந்து வீடு திரும்பும் போது, ரேடியோவில் திரைப்படப் பாடலுக்கு வரவேற்பறையில் அலுவலகத்துக்குப் புறப்பட்டு விட்ட லக்ஷ்மிநாராயணன் அசைவுகள் பழகிக் கொண்டிருக்கிறான்.

பீர்ஸ்டேஷன் அலுவலகம். கானகத்து வேடன் போல், தலைப்பாகையில் இறகு செருகி, கட்டைச் செருப்பில் ஜோதிடன் ஒருவன் அக்கவுண்டண்ட் மேஜையருகே வணங்கி நிற்கிறான். என்னவென்று நிதானிப்பதற்குள் புகைப்படம், கடிதங்கள் என்று மேஜையில் கடை பரப்பித் தெலுங்கில் ஜோதிடம் சொல்ல, அக்கவுண்டண்ட் மணியடித்து நேப்பாளத்து கூர்க்கா ஓடி வருகிறான்.

''யோவ்...''

லக்ஷ்மிநாராயணன் எழுந்து வந்து கடிகாரத்தைக் காட்டுகிறான்.

''அந்தாளை விடு. எனக்கு ஜோஸியம் பார்க்கணும். சாப்பாட்டு டைம். ஒரு பய வாயைத் தொறக்கக் கூடாது. சொல்லி வை.''

லக்ஷ்மிநாராயணன் கையை நீட்டுகிறான். வேடிக்கை பார்க்க நண்பர்கள் சூழ்கிறார்கள். அக்கவுண்டண்ட் பல்லைக் கடிக்க, கூர்க்கா செயலற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

கானகத்து ஜோதிடன் கண்களை மூடுகிறான். உதடுகளின் உச்சரிப்பு உக்கிரமாய் இருக்கிறது. ரேகை மேடுகளில் வெள்ளிப் பூண் போட்ட மந்திரக் கோல் நகர்கிறது. எதுவும் சொல்வதற்கு முன், காசி படத்தில் தட்சிணை வாங்கிக் கொள்கிறான். எதிர்காலம் பற்றிய தெலுங்கு மடை திறக்கிறது.

''இது மிகவும் நல்ல கை. யாரிடமும் காட்டாதே. பெரிய பெரிய சூப்பர்



ம.வே.சிவகுமார்

ஸ்டார்களின் கைகள் இது போலத்தான் இருக்கும். இனி அதிக நாட்கள் இல்லை. மனதில் நினைத்த காரியம் வெற்றியடையப் போகிறது. இந்த வேலையை விட்டு விடுவாய். அதனால் பரவாயில்லை. இனி உனக்கு வருத்தம் கிடையாது. சொந்த வீடு, கார் வரப் போகிறது. ஒரு தடவை ஊரில் குலதெய்வத்தை நீ பார்த்து வர வேண்டும். ஆடையில் கறுப்பு நிறம் வேண்டாம். மற்றபடி யோக ஜாதகம். சூப்பர் ஸ்டார் ஜாதகம். கவலை வேண்டாம். குலதெய்வம் பற்றிச் சொன்னது நினைவிருக்கட்டும்.''

கானகத்து ஜோதிடன் வணங்கி மறைகிறான். கணிக்கப்பட்ட எதிர்காலத்தில் மகிழ்ந்தவனாக நண்பர்களுடன் பேச்சினிடையே லக்ஷ்மிநாராயணன் அலறுகிறான்.

''அய்யய்யோ. என் மோதிரம் காணோம்டா.''

**மா**லை ஐந்து மணி. லிங்கிச் செட்டித் தெருவில் விநாயகம் செட்டியாரின் ஃபைனான்ஸ் கம்பெனி. பின்பக்கம் அச்சகம் நடக்கும் தடக் தடக் சப்தம். வெளியே லாரியில் கம்பி இறங்குகிறது. ஒரு வார்த்தை சொன்னதற்கு நண்பன் சுரேஷ்பாபு வந்திருக்கிறான்.

செட்டியார் உட்கார வைத்து புருப் பார்க்கிறார். ரசீது புத்தகம் ஆர்டர் எடுக்கிறார். டெலிபோனில் ரியல் எஸ்டேட் பேசிக் கொண்டே ஸ்டாம்ப் ஒட்டிய கடன் பத்திரம் நீட்டுகிறார். பெயர், தகப்பனார் பெயர், வீட்டு விலாசம், வேலை செய்யுமிடம்.

முதல் கையெழுத்தை லக்ஷ்மிநாராயணன் போடுகிறான். சிரித்துக் கொண்டே சுரேஷ் பாபு ஒத்துழைக்கிறான். விநாயகம் செட்டியார் இரண்டாயிரம் ரூபாயில் வட்டி போக மீதம் எண்ணுகிறார். பணத்தை வாங்கி வெளியே போகிற கதவில் ஸ்டிக்கர் ஒட்டியிருக்கிறது. 'நன்றி மீண்டும் வருக'.

''சார் சிவி ஃபீல்டா?''

ஜவுளிக் கடையில் சிப்பந்தி வலை விரிக்கிறான். மொத்தம் சேர்த்துப் பில் போடும் போது வழக்கம் போல் அதிகமாகவே ஆகியிருக்கிறது. மந்தைவெளியில் டான்ஸ் மாஸ்டர் வீடு. லக்ஷ்மிநாராயணன் சண்டைப் பயிற்சிக்கு அங்கேயே விலாசம் கிடைக்கிறது. அனைத்து இடங்களுக்கும் உடன் வந்த செய் நன்றிக் கடன் சுரேஷ் பாபுவுக்கு ஹோட்டலில் கழிகிறது.

**ப**ஸ் பிடித்து தாமதமாய் வில்லிவாக்கம் வீடு. குப்புறித்த குழந்தை முன்னால் கிலுகிலுப்பை கிடக்கிறது. லக்ஷ்மிநாராயணன் பார்த்துக் கொண்டிருக்கிறான். நாக்கு துருத்தி முயற்சி செய்து குழந்தை ஆவேசமாய் நெருங்குகிறது. இதோ கிலுகிலுப்பையை அது எட்டியும் விட்டது. லக்ஷ்மிநாராயணன் வெடுக்கென்று பிடுங்கி

## அருள்வாக்கு



வைத்தியங்கள் என்று சிலரைக் குறிப்பிட்டு அவர்கள் சித்த ஸ்வாதீனம் இல்லாதவர்கள் என்கிறோம். உண்மையில் நம்மில் யாருக்குமே சித்த ஸ்வாதீனம் இல்லைதான். வைத்தியம் வாயை அடக்காமல் பிதற்றிக் கொண்டே இருக்கிறது என்றால், நாமும் மனத்தை அடக்காமல் அது பிதற்றல் வழியில் போகத்தான் விட்டிருக்கிறோம்.

நமக்குச் சித்தஸ்வாதீனம் வந்து விட்டால் எப்படியிருக்கும் தெரியுமா? எத்தனை வலி ஏற்பட்டாலும், 'வலி என்று நினைக்காதே' என்றால் மனம் வலியைப் பொருட்படுத்தாமல் இருந்து விடும். எதிரிலே புலி வந்து உறுமினால் கூட மனத்திடம், 'பயப்படாதே' என்றால் அது பயப்படாமல் இருக்கும். இப்போது நாம் காரணமில்லாமலே அழுது கொண்டிருக்கிறோம். மனசு வசப்பட்டு விட்டாலோ, அழுகைக்குக் காரணமாக எத்தனை துக்கம் வந்தாலும் கூட அது சிரித்துக் கொண்டிருக்கும். ஆத்திரமூட்டும்படி என்ன நடந்தாலும் அது கோபமே இல்லாமல் சாந்தமாயிருக்கும்.

முதலில் மனசை இப்படி அப்படிப் போகாமல், நல்ல விஷயத்தில் நினைவைச் செலுத்தும்படி செய்ய வேண்டும். எண்ணெயை விட்டால் அது எப்படி பிசிர் இல்லாமல் ஒரே இழையாக விழுகிறதோ - இதைத் 'தைலதாரை' என்பார்கள். அது மாதிரி மனம் நல்ல நினைவில் ஒருமுகப்பட்டுச் செல்ல வேண்டும். 'ஸ்வாமி', 'ஸ்வாமி' என்ற நல்ல வஸ்துவை அப்படியே நினைத்துக் கொண்டிருக்கும்படி மனத்தை அப்பியாசப்படுத்த வேண்டும். அதன் பிறகு, 'நினைக்கிறோம்' என்பதும் போய், ஸ்வாமியிலேயே கரைந்து ஸ்வாமியாகவே ஆகி விடுவோம்.

இப்படி மனசை அடக்குவதுதான் 'யோகம்' என்பது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

யதில் குழந்தை ஒருகணம் திகைத்து விடுகிறது. கண்முன்னே மீண்டும் கிலுகிலுப்பை விழுகிறது. லக்ஷ்மிநாராயணன் பார்த்துக் கொண்டிருக்கிறான். வாயில் எச்சில் குமிழிட குழந்தை அலுக்காமல் முயற்சியைத் தொடர்கிறது.

வரவேற்பறையில் மனைவியை உட்கார வைத்து வேறு அறையிலிருந்து ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு உடையில் வெளிப்பட்டு லக்ஷ்மிநாராயணன் புதுத் துணி காட்டுகிறான். எல்லா உடைகளும் அவனுக்கு அழகாகவே இருக்கிறது. செலவோடு செலவாய் அவளுக்கு எடுத்த புடைவை கடைசியில் வருகிறது.

''இப்ப எதுக்கு?''

மகிழ்ச்சியில் மலர்ந்து விஜயலக்ஷ்மி எதற்கும் கேட்டு வைக்கிறாள்.

''ஜில்பாஸ்.''

லக்ஷ்மிநாராயணன் சிரிக்கிறான்.

''விஜயலக்ஷ்மி.''

''உம்.''

''ஷு ஒண்ணு வாங்கிக்கட்டுமா?''

''ஜில்பாஸ்.''

விஜயலக்ஷ்மி சிரித்துக் கொண்டே தலையசைக்கிறாள்.

**அ**ன்று இரவு பலத்த மழை பெய்கிறது. சாரலுக்கு கதவு மூடி விஜயலக்ஷ்மி குழந்தையை அணைத்துத் தூங்கி விடுகிறாள். வேறு அறையில் ஜன்னலில் மழை பார்த்து லக்ஷ்மிநாராயணன் நெடுநேரம் விழித்திருக்கிறான். வெளியே இடியும், மின்னலும் வலுக்கிறது. மழைச் சப்தம் காதுகளில் ஒட்டிக் கொள்கிறது. அலுத்துப் போய் எப்போது படுத்துக் கொண்டான் என்றே தெரியாது. உடனேயே விஜயலக்ஷ்மி மெத்தென்று எழுப்புகிறாள்.

''என்ன?''

''ஹேப்பி பர்த்டே.''

பாய் படிந்த கன்னத்தில் ஈர உதடு ஒத்தியெடுக்கிறாள். உலர்ந்த கேசத்தில் வாசனைப் பொடி மணக்கிறது. வெளியே மழை நின்றிருக்கிறது. விஜயலக்ஷ்மி பிடித்துக் கொண்டதில் குழந்தை பொக்கை வாயில் தகப்பன் கைகுலுக்குகிறது. கூடுதலாய் ஒரு பாயசம். எப்போதும் போல் அலுவலகம்.

**மா**லை வீடு திரும்பியதும் வரவேற்பறை மேஜையில் கவர்ச்சியாய் ஒரு பரிசு காத்திருக்கிறது. மாப்பிள்ளை பிறந்த நாளுக்கு, மாமனார் கொடுத்தது.

''பரவாயில்லையே. ங்கொப்பனுக்கு என் மேல இவ்வளவு அன்பா?''

ஆவலுடன் லக்ஷ்மிநாராயணன் பார்சல் பிரிக்கிறான்.

கட்டிய ரிப்பனுக்குள் மாமனார் பரிசாக, ஆபீஸ் பரீட்சைக்குத் தேவையான புத்தகங்கள்.

(தொடரும்)

செண்பகவல்லியின் ஆசை, விருப்பம் என்றில்லாமல் அவளுடைய லட்சியம் என்று கூட சொல்லலாம். நாலாயிரம் சதுர அடிக்குப் பூமி வாங்கி எண்ணூறு சதுர அடிக்குள் வீடு கட்டி, புறக்கடை, முன் வாசல் போக மீதி அத்தனை நிலத்திலும் பச்சைப் பசேல் என்று செடி, கொடி போட வேண்டும். புகார், கேலி, அறிவுரை ஒரு பக்கம் என்றில்லை நாலு பக்கத்திலிருந்தும் எழுந்ததை மீறி, விஸ்வநாதன் மனைவி ஆசையைப் பூர்த்தி செய்து கொடுத்தான்.

செண்பகவல்லியே வாளி வாளியாகத் தண்ணீர் கொண்டு வந்து நிலத்தில் ஊற்றினாள். விவேக்கும், கார்த்திக்கும் அம்மாவுக்கு உதவலாம் என்று தோட்டம் பக்கம் வந்தால், ஒரு எல்லை வரையில் தான் அவர்கள் உதவியை நாடுவாள். தண்ணீர் கொண்டு வந்தால் அம்மாவிடம் கொடுத்து விட்டு ஒதுங்கி விட வேண்டும். நிலத்தில் இறங்கி மண்வெட்டியால் கொத்தி விடும் பொழுது எழும் சிலிர்ப்பில் அசுர பலம் உடலில் ஒட்டிக் கொள்ளும்.

செண்பகவல்லியே பாத்தி கட்டி ஒவ்வொரு கன்றாக, ஒவ்வொரு விதையாக ஊன்றினாள். பதியன் போட வேண்டிய கிளைகளை கட்டுப் போட்டுக் கட்டினாள்.

முதலில் தளிர் விட்டது அரளியும், செம்பருத்தியும். ஒருநாள் காலை வேளை. விஸ்வநாதன் ஷேவ் பண்ணிக் கொண்டிருந்தான். 'என்னங்க! வாசலுக்கு வாங்களேன்' என்று அவள் போட்ட கூச்சலில் பாதி மழித்த தாடையுடன் வாசலில் போய் நின்றால், செண்பகவல்லி அரளி மற்றும் செம்பருத்தி பதியன் அருகில் முகம் முழுக்கப் பூரிப்புடன் நின்றாள்.

''என்ன செம்பா?''

''அரளி தளிர் விட்டிருக்குங்க!'' ஐ.ஏ.எஸ்ஸில் பேப்பரில் நம்பர் பார்த்தவன் முகம் போல ஒரு மலர்ச்சி.

இரண்டு வருடத்தில் செண்பகவல்லி சொன்னது மாதிரியே வீட்டை பச்சை மாளிகையாக்கி விட்டாள். ரோஜா முதல் பூ வெடித்தபொழுது முதல் கர்ப்ப சந்தோஷம். கொய்யா தோள் உயரம் கிளை விட்ட பொழுது விவேக் பத்தாவது பாஸ் பண்ணின குஷி.

''நக்காளின்னா இப்படி ஒரு தக்காளி. என்ன மண்ணுடியம்மா இது? முட்டைக் கோஸ் சைஸ்ல்னா காய்க்கறது. நத்தியா வட்டை ரெண்டு வருஷத்தில் கம்பு தழைக்கப் பார்த்திருக்கியா?'' சொல்லிச் சொல்லி மாய்வாள்.

ஆனால், செண்பகவல்லியின் உழைப்பை, அவளது சந்தோஷத்தைக் குலைப்பது மாதிரி அந்தக் கிடா ஆடு கிளம்பியிருந்தது.

இத்தனைக்கும் செண்பகவல்லி பாதி நேரம் தோட்டத்தில்தான் இருப்பாள்.



விஸ்வநாதன் அலுவலகத்திற்குக் கிளம்பும் பொழுது சரியாக ஒன்பதரை ஆகும். அதன் பிறகு உள்கதவைச் சாத்தினால் சரியாக ஒரு மணி நேரத்திற்கு அவளுக்கு வேலை இருக்கும். பதினொரு மணிவாக்கில் தோட்டத்திற்குள் நுழைந்தால் சாப்பிடப் போகும் ஒரு மணி வரையில் பூவைப் பார்ப்பதும், இலையைப் பார்ப்பதும், பூச்சி பொட்டு இருந்தால் மருந்தடிப்பதும், ரோடு பார்த்த செடிகளின் மேல் படர்ந்த தூசியைத் துடைப்பதும்தான் அவளுக்கு வேலை. செம்பருத்தியோடு பேசுவாள்; ரோஜாவை முத்தமிடுவாள்; மாதுளையைத் தடவிக் கொடுப்பாள். மீண்டும் ஒரு மணிக்குச் சாப்பிட்டு விட்டு மூன்றரை வரையில் தூக்கம், டிஃபன் கடை, வேலைக்காரி மேற்பார்வை இதெல்லாம் முடிந்து திரும்பவும் தோட்டத்துக்கு வந்தால் நாலரை வரையில். விவேக், கார்த்திக் வரும் வரையில்- மீண்டும் செடிகளுடன் சீராடல் தொடங்கும்.

இடைப்பட்ட இரண்டரை மணி நேரத்தில் அதாவது மத்யானம் ஒரு மணியிலிருந்து இரண்டரை வரை ஒரு பேய்த் தூக்கம் வரும். எந்த லோகத்தில் இருக்கிறோம் என்ற பிரக்ஞையில்லாமல் கிடப்பாள். அந்த நேரத்தை சரியாகப் பயன்



படுத்திக் கொண்டு அந்தக் கிடா தன் வேலையைக் காட்டியது.

முதல் நாள் வழக்கம் போல மூன்றரை மணிக்கு வாசல் இறங்கியபொழுதே துணுக்கென்றது. வாசல் கேட் தாழ் விலகிப் பாதி திறந்திருந்தது. ஐயோடி என்று ஒரு கூவல் உள்ளே எழும்ப தோட்டத்திற்கு ஓடினாள். குரோட்டன்ஸில் குறிப்பிட்ட ஒரு வகை போலீஸ்காரன் கிராப் மாதிரி இருந்தது. ரோஜாப் பதியனில் நாலைந்து மொட்டுக்களைக் காணோம். தக்காளி அத்தனையும் புரட்டிப் போடப்பட்டுக் கிடந்தது. வந்ததற்கு சாட்சியாக இரண்டு குளம்பு கொள்ளும் மண் வாசல் சிமெண்ட் பாதையில் கோலம் போட்டிருந்தது.

அதன் பிறகு ஒரு வாரம் அவள் தூக்கம் போனது. லொட் என்று வாசல் தாழ்ப்பாள் ஒலி கேட்டால் வாசலுக்கு ஓடுவாள். தேசிய நெடுஞ்சாலை காலனிக்கு மிக வெளியில் இருப்பதாலும், கிராமத்திற்குப் போகும் வரப்புப் பாதை இரண்டு தெரு தள்ளி இருப்பதாலும் ஆடு, மாடுகளை ஓட்டி வருபவர்கள் அந்தக் காலனியில் கிடையாது. காலனியில் உள்ள நூற்று எண்பது வீடுகளில் ஒரு வீட்டில் கூட ஆடு, மாடு வளர்க்கவில்லை. ஏன்? கோழி கூட வளர்ப்பதில்லை. இது கண்டிப்பாக புதிதாய் முளைத்திருக்கும் ஆடு.

ஒரு வாரம் செண்பகவல்லியின் தூக்கம் போனாலும் தோட்டம் இன்னும் நல்ல முறையில் பராமரிக்கப்பட்டது. எட்டாவது நாள் இனிமேல் ஆடு வராது என்ற குருட்டு தைரியத்தில் மத்யானம் படுத்தவள் ஒரு வாரம் தூங்காத தூக்கத்தைச் சேர்த்து வைத்துத் தூங்குபவளைப் போல தூங்கினாள். மூன்றரை மணிக்கு வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து வாசலுக்கு ஓடினாள். வாசல் கதவு நினைத்தது மாதிரி திறந்து கிடந்தது. போஸ்ட்மேன் வந்து போன அடையாளமாய்க் கொழுந்தனார் பரோடாவிலிருந்து போட்டிருந்த கடிதம் உள் திண்ணையில் கிடந்தது. பதறிக் கொண்டு தோட்டப் பக்கம் ஓடினாள்.

குளம்புத் தடம் அடையாளம் சொல்லவில்லை. தீய்ந்து போன காப்பிக் கொட்டையைப் போல் கிடந்த ஆட்டுப் புழுக்கை அடையாளம் சொன்னது. செம்பருத்தி புதிதாக நட்ட கம்பைப் போல இலை, பூ, தளிர் எதுவுமில்லாமல் இவள் வயிற்றெரிச்சலை ஒன்றாக அள்ளிக் கொண்டது போல நின்றது. செடியைச் சுற்றி பாதி கடித்து இழுத்த இலைத் துணுக்குகள். 'ஐயோ' என்றாள். செடியைத் தடவிக் கொடுத்தாள். உதிர்ந்த இலைகளைத் தொட்டுத் தொட்டுப் பார்த்தாள். ஒருமுறை உட்கார்ந்து அழுதாள்.

"ஏன் இவ்வளவு எமோஷனலா ஆயிடற?" விஸ்வநாதன் கேட்டான்.

"ஒவ்வொரு பூப் பூக்கும் போதும், தளிர் விடும்பொழுதும் எனக்கு ஏற்படும் பரவசம் இருக்கு பாருங்க. ஸம்திங் டிவைன். தக்காளிச் செடி கூட அதுவா பட்டுப் போனால் ஒழிய, காய் கொடுக்கறது நின்னு போச்சன்னு பிடுங்கி எறிஞ்சதில்லை. ஒரு நாளைக்கு இருபதுக்கும் மேல் பூக் கொடுக்கும் செம்பருத்தி மொட்டையா இருந்ததைப் பார்த்ததும் வயித்தை அள்ளிப் பிடுங்கிடுச்சங்க."

"ஓகே செம்பா. பசங்களுக்கு இப்போ க்வார்ட்டர்லி ஹாலிடேஸ்தான் இல்லியா? அவங்களை விட்டு ஆடு எங்கிருந்து வருதுன்னு கண்டுபிடிக்கலாம்."

**பை**யன்கள் இருக்கும் வரையில் ஆடு அந்தப் பிரதேசம் முழுவதும் கண்ணில் படவில்லை. சொல்லி வைத்தது மாதிரி பையன்களின் பள்ளிக்கூடம் திறந்த மூன்றாவது நாள். செண்பகவல்லி எல்லா வேலையையும் முடித்து விட்டுப் பதினொரு மணிக்குக் குளிக்கப் போயிருந்தாள். "கார்த்திக் அம்மா! கார்த்திக் அம்மா" என்று வாசலில் எதிர்த்த வீட்டு மாமியின் குரலும், அதனைத் தொடர்ந்து, "ஆடு! ஆடு" என்ற அலறலும் கேட்க அவசர, அவசரமாய் புடைவையைச் சுற்றிக் கொண்டு வாசலுக்கு ஓடினாள்.

வாசலில் கேட் பூட்டியிருந்தது. ஆடு எப்படி வர முடியும்?

"உங்க பக்கத்து வீட்டு காம்பவுண்ட் கேட் திறந்திருக்கு. அது வழியா நுழைஞ்சு, மாடிப்படி ஏறி, அதன் மூலமா உங்க காம்பவுண்ட் சுவர் ஏறி, உள்ளே குதிச்சு மத்யான ஆகாரம் கழிச்சிட்டு, திரும்பவும் காம்பவுண்ட் சுவர் குதிச்சு பக்கத்து வீட்டு மாடிப்படி இறங்கிப் போயிடுத்து" என்றாள் எதிர் வீட்டு மாமி.

"அதுவரைக்கும் பார்த்துட்டா இருந்தீங்க?"

"என்ன இப்படிக் கேட்கறீங்க கார்த்திக் அம்மா? அது சாப்பிட்டு முடிச்சு பக்கத்து வீட்டு மாடிப் படிக்குத் தாவினப்பதான் கவனிச்சேன்."

தன் வீட்டுக் கதவை மூடிக் கொள்ள எல்லாரையும் மிரட்டியது மாதிரி அடுத்த வீட்டுக்காரர்களை அவர்கள் வீட்டுக் கதவையும் மூடிக் கொள்ள சொல்லப் போக இரண்டு முறை வாய்த் தகராறானது. அந்த ஆடும் வழி கண்டு கொண்டு விட்டதால் நேர வரைமுறை என்பது இல்லாமல் அசந்த நேரம் பார்த்து உள்ளே புகுந்து புறப்பட ஆரம்பித்தது.

"ஏதாவது செய்யணுங்க" என்றாள் விஸ்வநாதனிடம்.

"என்ன செய்யலாம்?"

"அதை வெட்டிப் போட்டிடலாமான்னு வருது."

"ப்ச்! பாவம்! அது என்ன செய்யும்? மேய்ப்பவன் ஒழுங்கா இருந்தா வெள்ளாடு ஏன் வேலி தாண்டும்."

''மேய்ப்பானைக் கண்டுபிடியுங்க.''

விஸ்வநாதனுக்கும், பையன்களுக்கும் அதுவே வேலையானது. ஆட்டைத் தொடர்ந்து மேய்ப்பானைக் கண்டுபிடித்தார்கள். காலனியை அடுத்த கவிறு திரித்து வாழ்பவர்களில் ஒருவனின் ஆடு எனக் கண்டுபிடிக்கப்பட்டது. அவனை எச்சரிக்கப் போக அவன், வேண்டுமானால் வீட்டுக் கதவை பூட்டி வைத்துக் கொள்ளுங்கள் ஆட்டைக் குற்றம் சொல்லாதீர்கள் என்பது மாதிரி பேசி விட்டான். ஆட்டின் அட்டகாசம் தொடர்ந்தது.

''ஒன்னு செய்யலாம்மா'' என்றான் விவேக்.

''என்ன?''

''பண்டிகைக்கு ஒரு வாரம் எங்க ஸ்கூல் லீவ். நானும் கார்த்திக்கும் வாசல் கதவைத் திறந்து வைத்து உள்ளே பதுங்கிக் கொள்கிறோம். ஆடு வந்தவுடன் டக்குன்னு கதவை மூடிக் கயித்தால கட்டி வேப்ப மரத்தில் கட்டிப் போட்டுடலாம். அதுக்கப்புறம் எங்களுக்காச்சு, ஆட்டுக்காரனுக்காச்சு.''

அவர்கள் சொன்னது அவ்வளவு சரியாகப்படவில்லை என்றாலும் ஒரு முடிவு தெரிந்தாக வேண்டும் என்பதற்காகச் செண்பகவல்லி சம்மதித்தாள். விஸ்வநாதனும் பையன்கள் வம்பில் மாட்டிக் கொண்டு விடக் கூடாது என்னும் நோக்கில் தானும் விடுப்பு எடுத்துக் கொண்டு காத்திருந்தான்.

கார்த்திக்கும், விவேக்கும் பெட்-ரூம் ஜன்னல் பக்கம் பதுங்கிக் கொண்டார்கள்.

மணி பன்னிரண்டு ஆனது. சாப்பாடும் அங்கேயே; தண்ணீரும் அங்கேயே. மணி ஒன்றும் ஆனது. பையன்கள் துடிப்பாகக் காத்திருந்தார்கள். சின்ன சப்தம் வந்தால் கூட மெல்ல ஒரு ஒற்றனின் ஜாக்கிரதையுடன் வெளியில் எட்டி பார்த்தார்கள். மணி நான்கு ஆன பின்பும் ஆடு வரவில்லை.

''நாம லீவில் இருப்பதை ஆட்டிடம் யாரோ சொல்லி விட்டார்கள்...'' விஸ்வநாதன் கேலி பேசினான்.

பையன்களும் அலுப்பின் காரணமாக, ''இனிமேல் ஆடு வராது'' என்று காவல் தொழிலைக் கைவிட்டார்கள்.

''எல்லாரும் வீட்டில் இருக்கோம். சினிமா எதுனாச்சும் போய்ட்டு வரலாமா?'' என்றான் விஸ்வநாதன்.

''ரஜினி படம்'' என்றான் விவேக்.

''கமல் படம்'' என்றான் கார்த்திக்.

முடிவில் ஒரு மலையாளப் படம் முடிவு செய்யப்பட்டுக் கிளம்பினார்கள். வீட்டைப் பூட்டி விட்டு சாவியை எதிர் வீட்டு மாமியிடம் கொடுத்து விட்டு பஸ் ஸ்டாப் நோக்கி நடந்தார்கள்.

எதிரில் கறுப்பாக மேல் சட்டையில்லாமல் வாயில் பீடியுடன் ஒருவன் தென்பட்டான்.



- இந்தியனாக இரு -
  பலரும் இருக்கிறார்கள்,
  அமெரிக்காவில்!
- இந்தியப் பொருள்களையே
  வாங்கு -
  நானும் வாங்கினேன்
  லஞ்சம்!
- சுற்றுப்புறத்தைத்
  தூய்மையாய் வைத்திருப்போம்
  பக்கத்து வீட்டில்
  குப்பையைக் கொட்டி!

- ரா. போதிராமன்

''இவன்தான்'' என்றான் விஸ்வநாதன்.

''யார்?'' என்றாள் செண்பகவல்லி.

''நம்மைப் பைத்தியமாய் அடிக்கும் ஆட்டின் சொந்தக்காரன்.''

செண்பகவல்லி பரபரப்பானாள்.

''இந்தாப்பா! இங்க பாரு.''

ஆட்டுக்காரன் நின்றான்.

ஆட்டின் அக்கிரமங்களைப் பட்டியலிட்டாள்.

''இனிமே அம்மாவுக்கு ஆடு பத்தின கவலை வேண்டாம்.''

''வீட்டில் கட்டிப் போட்டுட்டியா?'' என்றாள் செண்பகவல்லி.

''இல்லீங்கம்மா. பண்டிகை வருது இல்ல. துணிமணி, பலகாரம் வாங்கணும். காக வேண்டி இருந்திச்சு. கசாப்புக் கடைக்காரன் ஐநூறு ரூபாய் தர்றேன்னான். நல்ல விலை. பண்டிகை சமயம் ஊரில் உள்ள டொய்க்கெல்லாம் டிமாண்டு ஜாஸ்திம்மா. வளர்த்தது போதும்னு கொடுத்துட்டேன் அம்மா'' என்றான்.

சட்டென்று செண்பகவல்லியின் முகம் கண்டி விட்டது. சினிமா முடிந்து வீட்டுக்கு வரும் வரையில் கூட சுரத்தில்லாமல் இருந்தாள்.

இரவில் வெகு நேரம் தூக்கம் வராமல் புரண்டதைப் பார்த்து விஸ்வநாதன் கேட்டான், ''என்ன ஆச்சு செம்பா?'' என்றான்.

''மனிதர்களால் புலால் சாப்பிடாமல் இருக்க முடியாதா?''

அந்தக் கேள்விக்கு விஸ்வநாதனிடம் பதில் இல்லை.

### சென்ற வாரம்...

திருவகீந்திரபுரத்திலுள்ள தேவநாதப் பெருமாள் ஆலயம் தீபங்களின் ஒளியில் ஜ்வலித்துக் கொண்டிருந்தது. சோழ இளவரசி அம்மங்கைதேவி பெருமாளைச் சேவித்து விட்டுச் சிற்ப மண்டபத்திற்கு வந்து, அங்கி ருந்த நுணுக்கமான சிற்பங்களை ரசித்துக் கொண்டிருந்தாள். உருவிய வாளுடன் நின்றி ருந்த இரணியனின் சிற்பத்தைப் பார்த்தாள். அந்த வாள் மின்னியது! சிற்பத்தின் வாள் மின்னுமா? அருகில் சென்று பார்க்க முயன்ற போது, அங்கே தூணோடு ஒருவன் அப்படி நிற்பதைக் கண்டாள். பயந்து பின்வாங்கிய போது, பின்னாலிருந்து நீண்டு வந்த இரண்டு கரங்கள் அவள் வாயைப் பொத்தின. இதைப் பார்த்த தோழியரின் அலறலைக் கேட்டுக் கோவில் அதிகாரியும் பட்டரும் ஓடி வந்த போது, இளவரசியை அங்கு காணவில்லை. திறந்திருந்த திட்டிவாசல் வழியாகப் பலர் ஓடுவது மங்கிய ஒளியில் நிழலுருவங்களாகத் தெரிந்தது!

## 2. எதிர்பாராமல் வந்தவன்

மாரிக்காலம் வருவதற்கு இன்னும் சில காலம் இருந்ததால் வெள்ளாற்றில் வெள்ளப் பெருக்கு இல்லையென்றாலும் நீரோட்டத்துக்குக் குறைவில்லை. அதன் ஆழமும் அகலமும் ஒரு கம்பீரத்தை உணர்த்தியது. முன்னிரவுக் காலமாதலால் நன்றாகக் கறுத்து விட்ட வானிலிருந்து மங்கலான ஒளியை வீசிக் கொண்டிருந்தது நிலவு. ஆற்று நீரில் நிலவு பிரதிபலித்து வெள்ளியை உருக்கி வார்த்தது போல் பளபளக்கச் செய்தது. ஆற்றின் கரையோரம் நீண்டு விரிந்து வெளேரென்று நிலவொளி யில் தெரிந்த மணற்பரப்பு, அதன் பக்கத்தில் இருளில் அசைவற்றுக் கருநிழலாக நின்ற மரக் கூட்டங்களின் கருமையை அதிகரித்துக் காட்டி பீதியை உண்டுபண்ண முயன்றது. ஆனால் இதனால் சற்றும் பாதிக்கப்படாமல் புரவி மீது அமர்ந்து மெல்ல வந்து கொண் டிருந்தான் அந்த வாலிபன். பாதையில் திடீர் திடீரென்று விலகி ஓடிய நரிகளைக் கண்டு முதலில் சற்று தயங்கிய அந்தப் புரவி, அந்த வாலிபன் கழுத்தில் தட்டிக் கொடுத்த பிறகு நம்பிக்கையோடு ஒரே சீராக நடந்து கொண்டிருந்தது.

ஆயிரத்தளி * நகரை விட்டுத் தான் கிளம்பி ரொம்ப தூரம் வந்து விட்டாலும் இன்னும் தான் நெடுந்தொலைவு பயணம் செய்ய வேண்டியிருப்பதை அவன் உணர்ந்து கொண்டிருந்தான். எனினும் சித் தத்தில் ஓடிக் கொண்டிருந்த சிந்தனைகளின் விளைவாகப் புரவியை நிதானமாகவே செலுத்திக் கொண்டிருந்தான்.

நெடிதுயர்ந்து வளர்ந்திருந்த அந்த வாலிபனின் தோற்றம் சற்று மெலிந்தே காணப்பட்டாலும் இடைவிடாத பயிற்சி யும் அளவான உணவும் அவன் உடலை இரும்பாகச் செய்திருந்தது என்பதை அவன் புரவியில் நிமிர்ந்து அமர்ந்திருந்த முறையே நிரூபித்தது. அவன் இடையில் தொங்கிய வாளும் அசாதாரண நீளத்துடனும் லேசாக வளைந்தும் பார்வைக்குச் சற்று அச்சத்தை ஏற்படுத்தியது. வாளின் பிடியில் ரத்தி னங்கள் பதிக்கப்பட்டுத் தென்பட்ட புலிச்

* வெள்ளாற்றங்கரையிலமைந்த ஆயிரத்தளி என்னும் ஊர் பிற்காலத்தில் சோழர் தலைநகராகவும் சில காலம் விளங்கியது. பலமான கோட்டையைக் கொண்டது.





சின்னம், சிவப்புக் கண்களால் இருளை ஊடுருவிக் கொண்டிருந்தது.

காஞ்சியிலிருந்து பொதிகையை நோக்கிக் கிளம்பிய அந்த வாலிபன் ஆயிரத்தளியிலும், திருவகீந்திரபுரத்திலும் தான் சேகரித்த செய்திகளைப் பற்றிச் சிந்தித்தபடியே புரவியை நடத்திக் கொண்டிருந்தான். இவ்வாறு மேலும் நீண்ட நேரம் பயணப்பட்ட அந்த வாலிபன் திடீரென்று புரவியை நிறுத்தி, வெகு தூரத்தே தெரிந்த மேலைமங்கலத்துக் கோட்டையின் நிழல் வடிவத்தைத் தன் கூரிய விழிகளால் உற்று நோக்கினான். ஒளிப் புள்ளிகள் கோட்டையின் மீதும் கவரை அணைத்து ஓடிய தாழ்வாரங்களிலும் தென்பட்டன. இதிலெல்லாம் வித்தியாசமாக அவன் ஏதும் உணராவிட்டாலும் எப்போதுமே அவன் உடன் உறைந்த எச்சரிக்கை உணர்வு இப்போதும் தலைதூக்கியது.

நீண்ட நேரம் அக்கோட்டையை ஆராய்ந்த அவனது விழிகள், மெல்ல நகர்ந்து ஊரை விட்டுச் சற்றுத் தள்ளி வெள்ளாற்றங்கரை வரை நீண்டிருந்த தோப்பை இப்போது ஆராய்ந்தன. கோட்டையை விட இது அருகாமையில் இருந்ததால், தோப்பின் ஒரு புறத்தில் மரங்களினூடே விளக்கொளியொன்று பளிச் பளிச்சென்று தெரிவதையும் சிலரின் நடமாட்டம் புலப்படுவதையும் கவனிக்க அவனால் முடிந்தது. அங்கு வெள்ளாற்றங்கரையில் ஆடிப் பெருவிழா நடக்கும் காலங்களில் மன்னரும் அவர் பரிவாரங்களும் வந்து தங்குவதற்காக ஏற்படுத்தப்பட்ட சிறு மாளிகையொன்றிருப்பதை அவன் ஏற்கெனவே அறிந்திருந்ததால், தன் புரவியை அந்தத் திக்கில் செலுத்தினான்.

அவன் எண்ணத்தைப் புரிந்து கொண்டதாலோ என்னவோ அந்தப் புரவி அதிகமாக ஒலியெழுப்பாமல் மணலில் குளம்புகளைப் பதித்துத் தோப்பை நெருங்கியது.

தோப்பின் முகப்பிலேயே புரவியை விட்டிறங்கிய அந்த வாலிபன், நேராக மாளிகையை நோக்கிச் சென்ற பாதையை விடுத்து, மரங்கள் கவிந்து, இருளை அதிகரித்திருந்த பகுதியின் வழியாக மாளிகையை நெருங்கினான். மேகங்கள் கறுத்துக் கிடந்ததாலும் அவ்வப்பொழுது குறுக்கே பாய்ந்து வான் நிலவை மறைத்ததாலும், தோப்பின் இருட்டு அவ்வப்போது கும்மிருட்டாகவும் மாறிக் கொண்டிருந்தது.

அளவில் சிறியதாகவும் நேர்த்தியாகவும் கட்டப்பட்டிருந்த அந்தச் சிறு மாளிகை பார்வைக்கு மிக அழகாக இருந்தாலும் அதிக விளக்குகள் இல்லாததாலும், சுற்றிலும் இருளடித்த மரங்கள் காரணமாகவும் அச்சத்தையே ஏற்படுத்தியது.

மாளிகையின் முகப்பில் படிகளில் நான்கைந்து வீரர்கள் அமர்ந்திருந்தனர். அவர்கள் தரித்திருந்த போர் உடையும் பளபளத்த வாட்களும் வேல்களும் அவர்கள் மேலைமங்கலத்துக் கோட்டையில் நடந்து கொண்டிருந்த போரிலிருந்து விடுபட்டு வந்தவர்கள் என்பதை அந்த வாலிபனுக்குப் புரிய வைத்தன. சற்று தள்ளி நின்ற புரவிகளின் மீது போடப்பட்டிருந்த துணிகளிலிருந்த சின்னங்கள் அவை பாண்டியருக்கு உரியவை யென்றும் அறிவித்தன. புரவிகளை அடுத்து

விஷ்வக்சேனன்

ஓர் அழகிய ரதமும் நின்றிருந்தது. அதன் முகப்பிலும் படிகளிலும் தெரிந்த சின்னங்கள் அது பாண்டிய அரச குடும்பத்தினர் பயன்படுத்துவதென்பதைப் புலப்படுத்தின.

மாளிகையின் மேன்மாடத்தில் இடது புறம் வெளிச்சம் தெரிவதையும் பேச்சுக் குரல்கள் சற்று பலமாகவே கேட்பதையும் கவனித்த அந்த வாலிபன், ஓசையின்றிப் பக்கவாட்டில் நகர்ந்து, அந்த மேன்மாடத்தின் கீழ்ப் பகுதியில் வந்து நின்றான். மாளிகையை ஒட்டி நின்ற மாமரத்தின் கிளைகள், மேல் உப்பரிகையைத் தொட்டுக் கொண்டு வளைந்து சென்றதைக் கவனித்தவன் வெகு லாவகமாக மரத்தில் தொற்றி ஏறினான். மரத்திலிருந்த பறவைகள் சடசடவென்று கிளப்பிய ஒலியால் சற்று திதாவித்து, காவலர் இருந்த திசையில் நோக்கினான்.

மரமிருந்த திசையைத் திரும்பி நோக்கிய அந்தக் காவலரது கண்களில் இருண்ட அதன் கிளைகளைத் தவிர வேறொன்றும் புலப்படாததால் மீண்டும் தங்கள் பேச்சைத் தொடர்ந்தனர்.

மேல்கிளைக்கு வந்த வாலிபன் இலைகளை நீக்கி மேன்மாடத்தின் உள்ளே தன் பார்வையைச் செலுத்தினான். உப்பரிகையை அடுத்து நீண்ட தாழ்வாரத்தின் முடிவில் கூடம் ஒன்று இருப்பதையும் அங்கு நால்வர் நின்று பேசிக் கொண்டிருப்பதையும் கவனித்த வாலிபன் அவர்கள் பேச்சை உற்றுக் கேட்கலானான்.

நடுவில் நிற்பவன் ஏற்கெனவே தான் இரண்டொரு முறை பார்த்திருக்கும் பாண்டிய இளவரசன் மாறவர்மன் என்பதைச் சட்டென்று புரிந்து கொண்ட வாலிபன், சுற்றிலும் நின்ற மூவரும் போர் உடையிலிருப்பதையும் அவர்களில் நெடிய உருவத்துடன் இடகாத்திரமாகத் தோற்றமளித்தவன் மாறவர்மனைப் பார்த்து உக்கிரமாக ஏதோ கேட்டுக் கொண்டிருப்பதையும் கவனித்தான்.

''மாறவர்மா, ஏனிந்த முட்டாள்தனமான காரியம் செய்தாய்? இதன் விளைவுகளைப் பற்றி சற்றேனும் சிந்தித்தாயா?'' - நெடிய உருவம் படைத்தவனின் குரலில் சூடுபறந்தது.

மாறவர்மனது பதில் பிகுந்த அசட்டையாக ஒலித்தது.

''நான் எது செய்தாலும் குற்றம்தான் மாமா உங்களுக்கு. எத்தனை சிரமப்பட்டு அவளை இங்கு கொண்டு வந்திருக்கிறேன் என்பது தெரியுமா உங்களுக்கு?''

''முட்டாளே, எதிரியுடன் நேருக்கு நேர் போரிடுவது என்பது உனக்குத் தெரியவே தெரியாதா? பெண்ணைக் கடத்தி வருவதும் அவளைப் பணயமாக வைத்துப் போரிடுவதும் வீரமாகாது மாறவர்மா!''

''மாமா, என் யோசனையைச் சற்று கேளுங்கள். மேலைமங்கலக் கோட்டையை நாம் பிடித்தவுடன் இவளை உள்ளே கொண்டு போய்க் கட்டாயமாக மணந்து கொண்டால் பிறகு சோழன் என்ன செய்ய இயலும்?''

''விக்கிரம சோழனையும் அந்தக் கிழப் பல்லவராயனையும் நீ அறிந்தது அவ்வளவு தான். நம்மைப் பூண்டோடு அழித்து விடுவார்கள். இந்த மேலைமங்கலத்துப் போரே நாம் அவசரப்பட்டு எடுத்த முடிவோ என்று நான் அஞ்சுகிறேன். கொற்கையிலிருந்து கிளம்பி விட்ட படை நாளை மாலைதான் வந்து சேரும்.''

அருகில் சற்று பருமனாக நின்றிருந்தவன் இடைமறித்தான்.

''பொன்னமராவதித் தலைவன் புறப்பட்டு விட்டதாகச் செய்தி வந்துள்ளது பிரபு. நாளை உச்சிப் பொழுதுக்குள் வந்து விடுவதாகவும் தகவல் அனுப்பியிருக்கிறான்.''

மாறவர்மன் குரல் உற்சாகமாக ஒலித்தது.

''பிறகு எதற்காக அஞ்ச வேண்டும் மாமா? நமது படைபலம் அதிகரித்து விட்டால் சோழனால் ஒன்றும் செய்ய இயலாது.''

மாறவர்மனுக்குப் பதிலேதும் கூறாது அந்த நெடியவன் கைகளைப் பின்புறம் கட்டியபடி சற்று உலவினான்.

அவன் திரும்பியதும் அந்த அறையில் நிலவிய வெளிச்சத்தில் அவன் முகத்தைக் கவனித்த வாலிபன், இவன்தான் மார்த்தாண்ட வர்மனாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான். மாறவர்மன் அவனை அழைத்த முறையும் அதை உறுதிப்படுத்தியது. பாண்டியர் அரசை மீண்டும் நிறுவவும், இழந்த மதுரையை மீட்டு மாறவர்மனை மன்னனாக அமர்த்தவும் அதி தீவிரமான முயற்சிகள் மேற்கொண்டிருந்த மார்த்தாண்டவர்மனின் தலையில் தெரிந்த நரைமுடிகள் அவன்

---



''தலைவரின் செல்வாக்கு பாதியாகக் குறைஞ்சுட்டு துன்னு எப்படிச் சொல்றே?''

''முன்பு ஆறடி நீளத் துண்டு போட்டிருப்பார். இப்ப மூன்று அடி துண்டுதானே அவர் தோளில் தொங்குது!''

– உ. ராஜாஜி

நடுத்தர வயதைக் கடந்தவன் என உறுதிப் படுத்தினாலும் ராட்சதன் உலவுவதைப் போன்ற பிரமையை உண்டாக்கின. கனமாகவும், அகலமாகவும் அவன் இடையில் தொங்கிய வாளும், உரமேறிய அவன் கரங்களும் அதில் தென்பட்ட வடுக்களும் அவன் பெரும் வீரனென்பதைப் புலப்படுத்தின. வல்லூறின் கண்களைப் போல் கூர்மையாகப் பளபளத்த அவன் விழிகள் சற்று அச்சத்தையே ஏற்படுத்தின.

உலவிய மார்த்தாண்டவர்மன் நின்றான். கூர்மையான அவன் பார்வை மாறவர்மன் மீது பாய்ந்தது. கேள்வியொன்றும் பிறந்தது அவனிடமிருந்து : ''மாறவர்மா, அம்மங்கை எங்கேயிருக்கிறாள்?''

கூடத்தின் வலது கோடியிலிருந்த அறையைச் சுட்டிக்காட்டிய மாறவர்மன், ''அந்த அறையில் இருக்கிறாள். நான் அவளைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்கிறேன். மேலைமங்கலத்தைப் பிடித்ததும், நான் அவளை அழைத்துக் கொண்டு அங்கு வந்து விடுகிறேன்'' என்றான்.

''சரி கவனமாக இரு. எங்களுடன் வந்த வீரர்களை இங்கேயே விட்டுச் செல்கிறேன்,'' என்ற மார்த்தாண்டன், அருகில் நின்ற மனிதனிடம், ''சோமசுந்தரா! வா, நாம் கோட்டையை கவனிக்கச் செல்வோம்'' என்றான்.

தடதடவெனப் படிகளில் அவர்கள் வேகமாக இறங்கிச் சென்ற சில நொடிகளில் புரவிகள் கிளம்பிச் சென்ற ஒலி கேட்டது.

**மா**றவர்மன் கூடத்திலேயே நின்று கொண்டிருந்தான். பிறகு சற்று நேரம் அங்குமிங்குமாக உலவினான். பின் இடதுபக்க அறைக்குள் நுழைந்தவன், கைகளில் மதுவும் குவளையுமாகத் திரும்பினான். கூடத்தின் நடுவில் இருக்கையொன்றை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தவன், குவளையில் மதுவை ஊற்றி உறிஞ்சத் தொடங்கினான். நிமிர்ந்தவன் கண்களில் அதிர்ச்சி பரவியது.

கூடத்தின் வாயிலில் உயரமாக ஒரு வாலிபன் சாய்ந்து நின்று கொண்டிருந்தான். அவன் பார்வை மாறவர்மன் மீது ஆணி அடித்தாற்போல் பதிந்திருந்தது. ஏதோ அந்த மாளிகையை விலைக்கு வாங்க வந்தவன் போல அலட்சியமாக நின்றிருந்த அவன் தோரணையும், கூரிய கண்களும் மாறவர்மனைத் திடுக்கிட வைத்தன. அவன் இடையில் தொங்கிய வாளைப் போல நீண்ட வாளை மாறவர்மன் அதுவரை பார்த்ததேயில்லை. அந்த வாளின் பிடியில் தெரிந்த புலிச் சின்னம் தன் சிவப்பு விழிகளால் மாறவர்மனை எரித்து விடுவது போல் நோக்கியது.



"பெண் பார்க்கப் போனப்பவே, நான் ஒரு ஜோக் எழுத்தாளன்னு சொன்னதுல பெண்ணுக்கு ரொம்ப மகிழ்ச்சி!"

"பரவாயில்லையே...! வேற என்ன சொன்னாங்க?"

"நல்லவேளை, கல்யாணத்துக்குப் பிறகு சொல்லி, விவாகரத்து பண்ணும்படியா வைக்காமல் இருந்தீங்களே'ன்னு சொன்னா!"

– சீர்காழி வி. ரேவதி

மதுக் குப்பியை எறிந்து விட்டுச் சட்டென்று எழுந்த மாறவர்மன், ''யார் நீ? டேய் யாரங்கே! ஓடி வாருங்கள்!'' என்று கூவினான்.

மாறவர்மனது பதற்றத்தையோ, அவன் கூவியதையோ சட்டை செய்யாத அந்த வாலிபன் நின்ற இடத்திலிருந்து இம்மி கூட அசையவில்லை. படிகளில் வீரர்கள் தடதடவென்று ஓடி வரும் ஒலியைக் கேட்டு, பார்வையை மட்டும் அவர்கள் பக்கம் திருப்பிய அந்த வாலிபன், தூணில் நன்றாகச் சாய்ந்து நின்றான்.

ஓடி வந்த வீரர்கள் அறைக்குள் புதிதாக ஒருவன் நிற்பதையும் அவன் வாளின் பிடியில் தெரிந்த புலிச் சின்னத்தையும் கண்டு, ஒரு கணம் திகைத்தாலும் மறுகணம் கைகளிலிருந்த வேல்களை அந்த வாலிபனின் மார்பை நோக்கி எறிந்தார்கள்.

**மா**ளிகையின் வலது கோடியிலிருந்த அந்த அறையில் தோப்பிலிருந்து வீசிய குளிர்ந்த காற்று தாராளமாகச் சாளரங்களின் வழியே நுழைந்து, அறையெங்கும் உலவியது. உலவிய காற்று பஞ்சணையில் மயங்கிக்கிடந்த அம்மங்கை தேவியைத் தன் மெல்லிய கரங்களால் வருடிக் கொடுத்ததால் பஞ்சணையில் புஷ்பக் கொடியொன்று அசைவது போலப் புரண்ட அம்மங்கைக்கு மெல்ல சுயநினைவு வரத் தொடங்கியது. சிரமப்பட்டு இமைகளைத் திறந்த அம்மங்கை மேலிருந்து தொங்கிய அலங்கார விளக்கு அணைந்து கிடப்பதையும் அறையின் மூலையிலிருந்த ஒரு தீபம் சிறிதளவே வெளிச்சம் அளிப்பதையும் அந்த மங்கலான ஒளியில் புதிதாகத் தெரிந்த அந்த அறையையும் கண்டு, ''நான் எங்கிருக்கிறேன்? என்ன ஆயிற்று எனக்கு?'' என்று தனக்குள்ளாகக் கேட்டுக் கொண்டவள், எழுந்து அமர முயன்றாள். தான் சுவாசித்த காற்றில் இன்னும் அந்த விபரீத மணம் இருப்பதையும், தலை லேசாகச் சுற்று

வதையும் உணர்ந்து இரு கரங்களாலும் தலையைப் பிடித்துக் கொண்டாள்.

தேவநாதப் பெருமாள் ஆலய சிற்ப மண்டபத்தில், தான் நரசிம்ம மூர்த்தியையும், இரணியன் சிற்பத்தையும் கண்டது அவள் நினைவுக்கு வந்தது. இருளில் உருவிய வாளுடன் ஒருவன் நின்றிருந்ததும் நினைவுக்கு வரவே அவள் முகத்தில் அச்சம் படர ஆரம்பித்தது.

தானிருந்த அறையையும் சாளரத்தின் வழியே தெரிந்த இருளையும் கண்ட அம்மங்கைக்கு ஒன்றும் புரியவில்லை.

மெல்ல நிதானித்துக் கொண்டவள் பஞ்சணையை விட்டு எழ முயன்றாள். கால்கள் பலமற்று துவளுவதாகத் தோன்றியது. வாயிலை நோக்கித் தடுமாறியபடியே நடந்தவள், திரைச் சீலையைப் பிடித்துக் கொண்டு வெளியே நோக்கினாள்.

கூடத்தில் நால்வர் நின்று பேசிக் கொண்டிருப்பதையும் அவர்கள் சோழர் குலத்துக்குச் சற்றும் சம்பந்தப்படாதவர்கள் என்பதையும் புரிந்து கொண்ட அம்மங்கையின் இதயம், புறாவின் சிறகுகளைப் போல படபடவென்று அடித்துக் கொண்டது. அவர்கள் பேசியது முற்றிலும் புரியாவிட்டாலும், நடுவில் நிற்பவன் மாறவர்மன் என்பதும், தான் மேலைமங்கலக் கோட்டைக்கருகில் இருப்பதும் புரிந்து விடவே மேலும் அச்சம் அவளைச் சூழ்ந்தது.

மாறவர்மனைப் பற்றி அமைச்சர் பல்லவராயர் எச்சரித்ததும் தான் அலட்சியமாகப் பதிலளித்ததும் அவள் நினைவுக்கு வந்தன.

சற்று நேரத்தில் மற்ற மூவரும் சென்று விட கையில் மதுக் குப்பியுடன் வந்து கூடத்தில் அமர்ந்து கொண்ட மாறவர்மனைக் கண்ட அம்மங்கைக்கு எப்படி அவனைத் தாண்டிச் சென்று தப்பிப்பது என்பது புரியவில்லை.

எப்படியும் இத்தனை நேரம் பல்லவராயருக்கு விஷயம் தெரிந்திருக்கும் என்பதும் சோழ வீரர்கள் தன்னைத் தேடி நான்கு திசைகளிலும் சென்றிருப்பார்கள் என்பதும் அவளது ஒரே நம்பிக்கையாக இருந்தது.

மாறவர்மன் மதுக்குப்பியை எடுத்து வர அறைக்குள் சென்றிருந்த போது வேகமாக அடியெடுத்து வைக்க முயன்ற அம்மங்கை, தான் சுவாசித்த புகையாலும் அதனால் உண்டான மயக்கத்தாலும் தனது கால்கள் பலமற்றிருப்பதையும், தன்னால் வேகமாக நடக்கவோ, ஓடவோ இயலாது என்பதையும் புரிந்து கொண்டாள். என்ன செய்வது என்று தெரியாமல் அச்சத்தில் விழிக்க ஆரம்பித்தாள்.

அரண்மனையில் சகல சௌகரியங்களுடனும் தன்னிஷ்டப்படியே இளவரசியாக வாழ்ந்து வளர்ந்து விட்ட அம்மங்கையின் மனதுக்கு இந்த அதிர்ச்சியைத் தாங்கும் மனோபலமும் உடல்பலமும் இருக்கவில்லை.

கண்கள் இருளடைய மீண்டும் ஒரு முறை நினைவுகளை உலுக்கி இமைகளைத் திறந்து பார்த்தாள்.

மாறவர்மன் அறைக்குள்ளிருந்து மதுக் குப்பியுடன் திரும்பி வந்து அமர்வதற்குச் சில வினாடிகளுக்கு முன், அருகிலிருந்த மரக்கிளையிலிருந்து ஒரு வாலிபன் சத்தமின்றி உப்பரிகையில் இறங்குவதையும் அவன் கூடத்தின் முகப்பிலேயே தூணொன்றில் சாய்ந்து நிற்பதையும் கவனித்தாள்.

தூணில் சாய்ந்து நின்றவனை மாறவர்மன் கவனித்த அதே நேரத்தில் அம்மங்கையும் கவனித்தாள். அவன் வாளில் பொறிக்கப்பட்டிருந்த புலிச் சின்னம் அம்மங்கைக்குப் புத்துணர்ச்சி ஊட்டியது. பல்லவராயர் அனுப்பிய வீரர்களில் ஒருவன் தன்னைத் தேடி வந்திருக்க வேண்டும் என்று நம்பினாள்.

மாறவர்மன் கூச்சலிட, வீரர்கள் ஓடி வரும் ஒலி கேட்டபோதிலும் அஞ்சாது அலட்சியமாக நின்றிருந்த அந்த வாலிபனது தோரணையைக் கண்டு வியந்தாள் அம்மங்கை.

அளவுக்கு மீறி நீண்டிருந்த உடைவாளுடன், தனது தமையன் விக்கிரம சோழனைப் போலவே நல்ல உயரமும் திடமுமாக நின்ற அந்த வாலிபன், தன் மனத்தில் நம்பிக்கையை உருவாக்குவதை உணர்ந்தாள்.

ஓடி வந்த வீரர்கள் ஒருகணம் திகைத்தாலும் மறுகணம் தங்கள் கைகளிலிருந்த வேல்களை அவனை நோக்கி எறிந்ததையும் அந்த வாலிபனை நோக்கி ஒரே சமயத்தில் நான்கு ஈட்டிகள் பாய்ந்ததையும் கண்ட அம்மங்கை, வீலென்ற அலறலுடன் திரைச் சீலையை நழுவ விட்டுச் சரிந்து மயங்கி விழுந்தாள்.

(தொடரும்)



நண்பர் : உங்க படத்துல வில்லன் யார்?

தயாரிப்பாளர் : விநியோகஸ்தர்கள்தான். அவங்கதான் என் படத்தை வாங்க மாட்டேங்கறாங்க!

– எஸ். முகம்மது யூசுப்

# நேரு நினைவு தங்கக் கோப்பை!

சரியாகப் பத்து வருடங்களுக்கு முன்னால் நேரு நினைவுத் தங்கக் கோப்பை உருவானது. இந்தியக் கால்பந்தாட்ட வீரர்களுக்கு, உலக அளவிலான வீரர்களின் கால்பந்தாட்ட டெக்னிக்குகள் கொஞ்சம் பிடிபடட்டுமே என்றுதான் 82 - ல் அகில இந்தியக் கால்பந்தாட்ட பெடரேஷன் இதைத் தொடங்கியது. இந்தப் போட்டிக்கு சர்வதேசக் கால்பந்தாட்டச் சங்கங்களின் பெடரேஷன் மிக உயர்ந்த ஸ்தானத்தைக் கொடுத்திருக்கிறது. ஆனால் இந்தியக் கால்பந்தாட்ட வீரர்களுக்குப் பலன் ஏதும் கிடைத்ததா என்றால், அதுதான் இல்லை! வருடா வருடம் கால்பந்தாட்டப் போட்டியை நடத்துவதைத் தவிர வேறொரு பயனும் காணவில்லை!

உலகக் கோப்பைக் கால்பந்தாட்டப் போட்டிகள் நடத்தும் பிற நாடுகளைப் பாருங்கள். எந்த நாடு நடத்துகிறதோ, அதுவே சக்கைப்போடு போடுகிறது, ஆட்டத்தில். 82லிருந்து 90 வரை ஒன்பது நேரு தங்கக் கோப்பைக் கால்பந்தாட்டப் போட்டிகளை கல்கத்தாவிலும், கொச்சியிலும், திருவனந்தபுரத்திலும், கோவாவிலும் நடத்தியிருக்கிறோமே, எதிலாவது அந்தத் தங்கக் கோப்பைப் பரிசைத் தட்டிக்கொண்டிருக்கிறோமா? நமக்கு ரொம்பவும் பரந்த மனப்பான்மை. 'நாமே கோப்பையைப் பரிசாக வைத்து விட்டு, நாமே எடுத்துக் கொண்டால் எப்படி?' என்று நம் வீரர்களுக்கு நினைப்பு போலும்.

ஆனால் உலகக் கால்பந்தாட்டப் போட்டி 1930-லிருந்து நடக்கிறதே. இதாலி, ஜெர்மனி, அர்ஜென்டீனா, இங்கிலாந்து என்று அவரவர் நாட்டில் நடந்த போதெல்லாம் அந்தத் தங்கக் கோப்பையை அவர்களே தட்டிச் சென்றதை யாராவது மறக்க முடியுமா?

இதற்கு என்ன காரணம் இருக்க முடியும்? இந்திய ஆட்டக்காரர்களைப் பொறுத்தவரை, ஒரு பதினெட்டு - இருபது பேர் இருந்தால், இரண்டு போட்டிகளில் கூட அதே ஆட்கள் ஆட மாட்டார்கள். கச முச வென்று மாற்றி விடுவார்கள். அப்புறம் ஆர்வமாவது, ஒன்றாவது! ஆட்டக்காரர்களைத் தேர்வு செய்வது முதல், பயிற்சி கொடுத்துக் களத்துக்கு அனுப்பி வைப்பது வரை ஏதானும் கொஞ்சம் சீரியஸ்னஸ் இருந்தாலல்லவா?

போலந்து, பல்கேரியா, வடகொரியா, தென்கொரியா, சைனா - எல்லாமே இது போன்ற சர்வதேசக் கால்பந்துப் போட்டிகளை, அடுத்த போட்டிகளில் மோத ஒரு பயிற்சிக் களமாக நினைத்து ஆட வருகின்றன. அதே போல அகில இந்தியக் கால்பந்தாட்ட பெடரேஷனும் நம் இந்திய வீரர்களின் பயிற்சிக்கு இது ஒரு வாய்ப்பு என்று கருதினால் நல்லது.



பிப்ரவரியில் நேரு தங்கக் கோப்பை கால்பந்தாட்டத் தொடர் முடித்த கையோடு, இந்திய வீரர்கள், உலகக் கோப்பைக் கால் பந்தாட்டத்துக்கான முன் போட்டிகளில், லெபனானிலும், தெற்கு கொரியாவிலும் விளையாடியாக வேண்டும். சும்மா சந்தோஷ் கோப்பை, பெடரேஷன் கோப்பை, நேரு கோப்பை என்று நடத்தி, நிதி சேர்ப்பதில் மட்டும் குறியாக இருந்தால் போதாது.

இத்தனைக்கும் நேரு கோப்பைக்காக விளையாட வரும் வீரர்களில் பெரிய ஸ்டார்கள் யாரும் இல்லையாம். இப்படிப்பட்ட நிலையிலும் கூட, நம் இந்திய வீரர்கள் கடைசி இடத்தையே விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருப்பதுதான் பரிதாபம்.

ஊக்குவிப்புத் தொகையைக் கூட்ட வேண்டும். நன்றாக ஆடினால் போனஸ் கூடக் கொடுக்கலாம்தான்.

எப்படியோ, சென்னை நேரு ஸ்டேடியத்தில் நடைபெறும் போட்டிகளிலாவது, நேரு தங்கக் கோப்பையைக் கைப்பற்றும் எண்ணத்துடன் இந்திய அணி ஆடட்டும்!

– சித்தார்த்



* ஆனந்த பைரவி



* ''ஒரே தெய்வம்!''

● மீனாட்சி சுந்தரம், கடம்பநல்லூர்.

*? புத்தகக் கண்காட்சியில் ஏற்பட்ட தீ விபத்தினால் மூன்று கோடி ரூபாய் மதிப்புள்ள புத்தகங்கள் அழிந்து விட்டனவே?*

! ரொம்ப வருத்தப்பட வேண்டிய விஷயம்தான். நமது அநுதாபங்கள் எல்லா புத்தகப் பிரசுர கர்த்தர்களுக்கும் உண்டு. ஆயினும் ஒரு தீயணைப்பு வண்டியைக் கொண்டு வந்து தயார் நிலையில் வைத்திராதது நிர்வாகிகளின் குற்றமே. (போன வருஷம் கூட இருந்ததாம்.) இரண்டாவது, கொசு உபத்திரவத்துக்காக வத்திச் சுருள் கொளுத்தி வைக்கப்பட்டதாகக் கூறப்படுவது உண்மையானால் வீடு திரும்புமுன் சரியாக அணைக்காமல் போனது ஏதோ ஒரு ஸ்டால் எடுத்தவர் செய்த குற்றமே. இதற்கெல்லாம் பதிப்பாளர்கள் தங்களைத் தாங்களே நொந்து கொள்ள வேண்டியதுதான்.

# சி.எஸ். ராஜினாமா பற்றி...?

● சதாசிவம், கவுந்தம்பாடி.

*? கிராமப் பகுதிகளில் பிரபு நடித்த படம் என்றால் மக்கள் வெகுவாக ரசிக்க என்ன காரணம் சார்?*

! ''நாங்கள் வழிபடும் ஒரே தெய்வம் பிரபுவேதான்'' என்று சொன்ன நகர போஸ்டர்கள் உங்கள் கண்ணில் படாதது நகர்ப்புற ரசிகர்களின் குற்றமல்ல, சார்!

● ஸி.கே. ரவி சங்கர், கோவை.

*? சி.எஸ். ராஜினாமா பற்றி?*

! பத்திரிகைகளுக்கு அல்லாது தனிப்பட்ட முறையில் பேசப்பட்ட விஷயங்களை, அழைக்கப்படாத விருந்தினராக இருந்த பத்திரிகை நிருபர், கோவா பத்திரிகையில் வெளியிட்டது அநாகரிகம். பத்திரிகை தர்மம் அல்ல. தலைவர்களுக்குப் பத்திரிகைகளிடம் நம்பிக்கையைக் குலைக்கும் செயல். பல சந்தர்ப்பங்களில் "Off the record" என்று கூறிப் பேசுவது உண்டு. இனி தயங்குவார்கள். விஷயம் வெளிப்பட்ட பிறகு சி.எஸ். ராஜினாமா செய்தது நாகரிகம், கண்ணியச் செயல். ''நான் செய்தது பெருந் தவறு. அதனால் ராஜினாமா சமர்ப்பிக்கிறேன்'' என்று சி.எஸ். கூறி, ராஜினாமாவைக் கொடுத்த பிறகு, பிரதமருக்கு அதை ஏற்பது தவிர வேறு வழியில்லை. ''செய்தது தவறானாலும் தொடர்ந்து பதவியில் இருங்கள்'' என்று ஒரு பிரதமர் யாரிடமும் கூற முடியாது, கூடாது. அவ்வாறிருக்க, பிரதமரின் இந்தச் செயலை (சி.எஸ். உள்பட) சிலர் கிண்டல் செய்வதும் கண்டிப்பதும் படு அநாகரிகம்.

● ஜி. இந்திரா, திருச்சி.

*? மைய அமைச்சர் மம்தா பானர்ஜி கல்கத்தா தலைமைச் செயலகத்தில் தாக்கப்பட்டதாக வந்த செய்தி குறித்து?*



* ராஜினாமா!

! தாக்கப்பட்டார் என்பது வருந்துவதற்குரியது என்றாலும் தாக்கப்படும் அளவுக்கு அவர் தொந்தரவு கொடுத்திருக்கிறார் என்பதும் உண்மையே. மம்தா பானர்ஜி ஆர்ப்பாட்ட அரசியல்வாதி. அதிலும் சென்ற முறை அவர் பேசிய பொதுக் கூட்டத்துக்குப் பெருந்திரளாக மக்கள் வந்திருந்ததில் அவர் நிலை தடுமாறித்தான் போயிருக்கிறார். வங்க அரசியலில் காட்டும் ஆர்வத்தை அவர் தமது மைய அமைச்சரவைப் பணிகளில் காட்டுவதே நல்லது. அவரது அடாவடி நடவடிக்கைகள் காரணமாகப் பிரதமரே நொந்து போய், இப்போது அவருக்கு அமைச்சரவையில் இடமில்லாமலே செய்துவிடுவார் போலிருக்கிறது என்பது லேட்டஸ்ட் செய்தி.

● வி. பரமசிவம், மதுரை.

*? போலீஸ் பாதுகாப்பில் இருக்கும்போதே ஒரு விடுதலைப்புலி தற்கொலை செய்து கொண்டதை என்னவென்று சொல்வது?*

! போலீஸின் திறமை மீது நமக்கு நம்பிக்கையைக் குறையச் செய்யும் மற்றொரு நிகழ்ச்சி என்றுதான்!

● பி. ராஜசேகரன், மதுரை.

? "ரேஷன் கார்டில் உள்ள வருமான உச்சவரைப் பற்றிக் கவலைப் பட வேண்டாம். வறுமைக் கோட்டுக்குக் கீழ் உள்ள அனைவருக்கும் அரிசி தாராளமாகக் கிடைக்கும்" எனத் தமிழக அமைச்சர் விசுவநாதன் கூறியுள்ளது குறித்து?

! அரிசி கிடைத்ததோ இல்லையோ, ரேஷன் கார்டு கேட்கப் போன பெண்களுக்குப் போலீஸார் முடியைப் பற்றி இழுத்துச் செய்த தடியடி நிறையவே கிடைத்தது!

● டி. எஸ். சீதாராமன், கும்பகோணம்.

? "ஆனந்த பைரவி ராகம் வாசிக்கக் கேட்டாலே ரத்த அழுத்த நோய் குணமாகி விடும்" என்று குன்னக்குடி சொல்கிறாரே?

! அது வாசிக்கப்படும் விதத்தையும் பொறுத்தது. ரத்த அழுத்தம் அதிகரிக்கிற மாதிரியும் வாசிக்கலாம்!

● எம். பிரபு, குமராட்சி.

? மூப்பனார் - வாழப்பாடி நகராறை நரசிம்ம ராவ் கண்டு கொள்ளாதது ஏன்?

! ஹார்ட் அட்டாக் நோயாளி இருக்கும் போது, மூக்கு உறிஞ்சும் ஜலதோஷ பேஷண்ட்டையா டாக்டர் கவனிப்பார்?

● மு. இரவிச்சந்திரன், சேலம் ❑

? தென்னாப்பிரிக்காவில் இழந்த கௌரவத்தை இங்கிலாந்து அணியுடன் ஆடும் போதாவது மீட்பார்களா?

! அஷாருத்தீன் ஒரு வேளை தமது அணி இழந்த கௌரவத்தைத் திரும்பப் பெற்றாலும் பெறலாம்; ஆனால் இந்திய மண்ணில் நடக்கும் கிரிக்கெட் மாட்சின் ஒளிபரப்பு உரிமையை அயல்நாட்டு டீ.வி நிலையத்துக்கு இழந்து விட்டு நிற்கும் தூர்தர்ஷன் அதன் மூலம் இழந்த தன் கௌரவத்தைத் திரும்பப் பெறவே முடியாது!



● "கவலை வேண்டாம்!"



● கௌரவம் மீட்பாரா?



● கண்டு கொள்ளாதது....



● தாக்கப்பட்டார்!

● ரவி, திருத்துறைப்பூண்டி.

? புதுதில்லி விமான விபத்து....?

! 165 பயணிகளும் விமானப் பணியாளர்களும் பைலட்டுகளும் தப்பிப் பிழைத்தது மன நிம்மதி அளித்த ஒரு மாபெரும் ஆச்சர்யம். தலைகீழாகக் கவிழ்ந்து உருத் தெரியாது முற்றிலும் அழிந்து போன ருஷ்ய விமானம், அந்நாட்டவரின் விமானங்கள், விமானிகள் மீதே அவநம்பிக்கையைத் தோற்றுவித்து விட்டிருக்கிறது என்றாலும் நமது விமான நிலையங்களில் அதி நவீன விமானங்களைப் பாதுகாப்பாக இறக்கப் போதிய அளவு உபகரணங்கள் இல்லை என்ற இந்தியன் ஏர்லைன்ஸ் பைலட்டுகளின் குற்றச்சாட்டும் முக்கியத்துவம் பெறுகிறது. குறிப்பாக மூடுபனியின் அடர்த்தி வினாடிக்கு வினாடி கூடிக் குறையும் புதுதில்லி போன்ற இடங்களில் விமான நிலைய உபகரணங்கள் முதல் தரமானவையாக இருப்பது அவசியம்தான். இதே சமயத்தில் கைநிறையச் சம்பளம் வாங்கும் நமது இந்தியன் ஏர்லைன்ஸ் பைலட்டுகளும் வேலை நிறுத்தத்தை நீடித்துக் கொண்டே போய் அனுதாபத்தை அடியோடு இழந்து விட்டார்கள். இந்த விபத்து அவர்கள் மீது எரிச்சலை அதிகரித்து விட்டிருக்கிறது. கொடுத்து வைத்தவர் சிந்தியாதான். கால் கடிதாக கொடுத்து விட்டு ஹாய்யாக இருக்கிறார்!

● ஆங்கரை ஆனந்த், திருச்சி.

? இந்தியா டுடே சர்வேயில் பா.ஜ.க. பலம் அதிகரித்துள்ளதாகத் தெரிகிறதே? என்ன நினைக்கிறீர்கள்?

! நல்லதற்கல்ல என்றுதான்.

● ஆர். சிவன், மதுரை.

? மசூதி இடித்தது தவறு என்று வாதிடும் பத்திரிகைகள் தி. கவினரின் ராமர் எரிப்புப் போராட்டத்தைக் கண்டிக்காதது ஏன்?

! தி. க.வினர் செய்வது ரொம்ப ரொம்பத் தப்புத்தான். ஆனால் அவர்கள் இப்படித் தான் நடந்து கொள்வார்கள் என்பது தெரிந்த கதையானதாலும் மசூதி தகர்ப்புக்கு எதிர் மரியாதை இது என்பதாலும் கண்டன வேகம் குறைகிறது. பி.ஜே.பி யின் மசூதித் தகர்ப்பு எதிர்பாராத அதிர்ச்சியானதாலும் உலகளாவிய எதிர்விளைவுகளை உண்டாக்குவதாலும் அதிகமான கண்டனத்தைப் பெறுகிறது.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
மு. இரவிச்சந்திரன்,
19-A, அந்தோணிசாமி தெரு,
சுவாமிநாதபுரம், சேலம் - 636 009.

# சக்கரவர்த்தித் திருமகன்

## ராஜாஜி

## 18. கைகேயி

ராஜ குல அந்தப்புர வழக்கத்தை யனுசரித்து, கைகேயிக்கு, தோழியும் அந்தரங்க வேலைக்காரியுமாக ஒரு கூனியம்மை எங்கிருந்தோ வந்து சேர்ந்திருந்தாள். எஜமானி கைகேயிக்கு இவள் கொஞ்சம் சொந்தம் கூட; அதனால் நெருங்கிப் பழகும் உரிமையைக் கொண்டாடி வந்தாள். இவள் பெயர் மந்தரை. ராமாயணக் கதையில் மிகப் பிரசித்தி பெற்ற பாத்திரம். நம் நாட்டு மக்கள் அனைவரும் ஆண், பெண், குழந்தைகள் எல்லோரும் வெறுக்கும் பாத்திரம். இவளே ராமனைக் காட்டுக்கு அனுப்பச் செய்தவள். இவள் என்ன செய்தாள், எப்படிச் செய்தாள் என்பதை விவரமாக இனி பார்க்கலாம்.

தசரதன் ராஜ சபையைக் கூட்டி ராம சந்திரனுக்கு நாளைக்கே பட்டாபிஷேகம் செய்துவிட வேண்டும் என்று நிச்சயித்த அந்த நாள், மந்தரை தற்செயலாக அந்தப்புரத்து மேல் மாடி ஏறி அழகிய உப்பரிகையில் ஏறி நின்றாள். உயரத்திலிருந்து நகரத்தைப் பார்த்தாள். தெருவெல்லாம் தண்ணீர் தெளித்து அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. ஜனங்கள் தங்கள் வீடுகளின் மேல் பல வித அழகிய கொடிகள் பறக்க விட்டிருந்தார்கள். ஆடை அணிகள் பூண்டு, சந்தனம் பூசி, புஷ்பம் அணிந்து, எங்கே பார்த்தாலும் கூட்டம் கூட்டமாக ஜனங்கள் ஏதோ பேசிக் கொண்டு மிகச் சந்தோஷமாக இருப்பதைப் பார்த்தாள். கோயில்களில் எல்லாம் வாத்திய கோஷம். ஏதோ பெரிய மங்கள உற்சவம் நடக்கப் போவதாகத் தெரிந்தது.

மந்தரை பக்கத்தில் நின்ற அந்தப்புர வேலைக்காரியைப் பார்த்து, ''என்ன நீ பட்டு உடுத்தியிருக்கிறாய்? என்ன விசேஷம் ஊரில்? கௌசல்யா தேவி பிராமணர்களுக்குத் தக்ஷிணை கொடுத்துக் கொண்டிருக்கிறாள் போலிருக்கிறதே! பணத்தைச் சாதாரணமாக வீண் செலவு செய்ய மாட்டாளே! எங்கே பார்த்தாலும் திருவிழா வாத்தியமும், அலங்காரமுமாக இருக்கிறதே! உனக்கு ஏதாவது தெரியுமா?'' என்று கேட்டாள்.

''உனக்குத் தெரியாதா? நம் ராமசந்திரனுக்கு நாளைக் காலை யுவராஜ பட்டாபிஷேகம்'' என்று அந்த வேலைக்காரச் சிறுமி சொல்லிவிட்டுக் கொண்டானடித்தாள்.

இதைக் கேட்டதும் மந்தரைக்கு அடங்காத கோபம் மேலிட்டது. மிக வேகமாகக் கீழே இறங்கினாள். நேராகக் கைகேயியின் அறைக்குச் சென்றாள். அப்போது கைகேயி படுத்திருந்தாள்.

''மூடப் பெண்ணே! எழுந்திரு, எழுந்திரு! தலைக்கு மேல் பெரிய வெள்ளம் வருகிறது. நீ மோசம் போனாய்.

உன் அதிர்ஷ்டம் வற்றிப் போச்சு, மூடப் பெண்ணே, தூங்கு கிறாயே!'' என்றாள்.

மந்தரையின் துக்கத்தைப் பார்த்து அவளுக்கு ஏதாவது நேர்ந்து விட்டதோ என்று கைகேயி எண்ணி, ''மந்தரை, உனக்கு என்ன துயரம் ஏற்பட்டது? ஏன் இப்படித் துக்கப்படுகிறாய்?'' என்று மெதுவாகக் கேட்டாள்.

மிகக் கெட்டிக்காரியான மந்தரை பேச ஆரம்பித்தாள்.

''உனக்கும் எனக்கும் விநாசம் வந்து விட்டது, பெண்ணே! ராமனை யுவராஜனாகச் செய்து விடத் தசரதன் நிச்சயம் செய்து விட்டான். இதற்கு மேல் எனக்கு என்ன துக்கம் வேண்டும்? உனக்குத் துக்கம் வந்தால் நான் எப்படிச் சும்மா இருக்க முடியும்? ஓடி வந்தேன். அரச குலத்தில் பிறந்து வளர்ந்தாய்; மகாராஜனுடைய வீட்டில் அரசியாக வும் புகுந்தாய். ஐயோ! கெட்டுப் போனாயே! ஒன்றும் அறியாத அப் பாவிப் பெண்ணாயிருக்கிறாய். இனிய மொழிகள் பேசிப் பேசி உன் புருஷன் உன்னை ஏமாற்றியே விட்டான். வஞ்ச னைக்காரன், எல்லாம் கௌசல்யைக் குக் கொடுத்து விட்டு உன்னைத் தெரு வில் திண்டாட விட்டு விட்டான். மோசக்காரன், பரதனை 'மாமன் வீட் டுக்குப் போ' என்று சொல்லி வெகு தூர தேசத்துக்கு அனுப்பி விட்டு, இங்கே அவசர அவசரமாக ராமனுக்குப் பட்டா பிஷேகம் செய்யப் போகிறான். நாளைக்கே எல்லாம் முடிந்து விடப் போகிறது. நீயோ எல்லாம் பார்த்துக் கொண்டு சும்மா படுத்துக் கிடக்கிறாய். நீயும், உன்னை நம்பியிருக்கிறவர்களும் எல்லோரும் அழிந்தார்கள்.''

இப்படி மந்தரை அடுக்கிக் கொண்டே போனாள். கைகேயிக்கு இந்தப் பேச்சு காதில் பட்டதேயொழிய அதன் பொருளில் கவனம் செல்ல வில்லை. அவள் ஒன்றே ஒன்றைத்தான் கவனித்தாள். அதாவது ராமனுக்குப் பட்டாபிஷேக மகோற்சவம் நடக்கப் போகிறது என்பதைத்தான்.

''என் குமாரன் ராமனுக்குப் பட்டா பிஷேகம் என்கிற செய்தியைக் கொண்டு வந்தாய், மந்தரா! இதைவிட என்ன சந்தோஷம் எனக்கு? இந்தா, இதைப் பெற்றுக் கொள்! இன்னும் என்ன வேண்டுமோ, கேள்!'' என்று தன் கழுத்திலிருந்த மாலையை எடுத்து மந்த ரைக்குக் கொடுத்தாள். மங்களச் செய்தி கொண்டு வந்தவர்களுக்கு ஏதாவது பொருள் உடனே தருவது ராஜ குல வழக்கம்.

**ம**ந்தரை வீணாகப் பயப்படு கிறாள். அவள் ஒரு வேலைக்காரி தானே! பெரிய வீட்டு விஷயங்களை அவளால் தெரிந்து கொள்ள முடியாது. அவளுடைய மூட பயத்தைப் போக்கி, தைரியம் உண்டாக்க ஆபரணத்தை அவ ளுக்குத் தந்து தன் மகிழ்ச்சியை அவளும் அடையச் செய்யலாம் என்று கைகேயி எண்ணினாள்.



கைகேயினுடைய உள்ளம் எளிதில் கெடவில்லை. நல்ல பண்பாடு பெற்ற வள். கீழ்த்தர புத்திக்கு உடனே இடம் கொடுக்க வில்லை. மந்தரைக்கோ இதைக் கண்டு துக்கம் இன்னும் அதி கரித்தது.

கைகேயி தந்த மாலையை அப் படியே வீசி எறிந்துவிட்டு, மந்தரை ''ஐயோ, பைத்தியக்காரி! தலைக்கு மேல் வந்திருக்கிறது வெள்ளம். மடப் பெண்ணே! நீயோ ஹா ஹா என்று சிரித்து மகிழ்கிறாய். தீராத கஷ்டம் வந்து உன் வாழ்க்கையைக் கவிழ்ப் பதற்கு நிற்கும் போது நீ கண்ணை மூடிக் கொண்டிருக்கிறாய். உன்னைப் பார்த்து நான் சிரிக்கவா, அழவா? உன் சக்களத்தியானவள் தன் மகன் பட்டத் துக்கு வர ஏற்பாடு செய்து விட்டாள். நீ இது வெகு மங்களம் என்று கூத்தாடு கிறாய். உன் மதியை நான் என்னென்று சொல்லுவேன்? ராமன் பட்டம் பெற்ற பின் பரதன் நிலை என்ன? பரதன் இருக் கும் வரையில் தனக்கு என்றைக்குமே அபாயம் என்று ராமன் எண்ணுவான் அல்லவா? இயற்கையின் போக்கு ராம னுக்குத் தெரியும். ஆனாபடியால் பரதன் ராமனுக்குப் பகையாகி விட்டான். பயத் தினால்தான் விரோதிகளை அரசர்கள் கொல்லுவது. ராமன் பட்டம் பெற்ற பின் பரதனைக் கண்டு அவன் பயப்படு வான். பயத்தினால் அல்லவோ பாம்பு களைக் கண்டவுடன் கொல்லுகிறோம்? பரதன் உயிரைப் பற்றி இனிமேல் சந் தேகப்பட்டுக் கொண்டே இருக்க வேண்டியதாகும். நாளை பொழுது விடிந்ததும் கௌசல்யை பாக்கியவதி யானாள். நீ அவளுக்குத் தாசியானாய். அவள் முன் கை கூப்பி வணங்கி ஒரு வேலைக்காரியாக நிற்பாய். நாளை முதல் உன் மகனுடைய சுதந்திரமும் முடிந்தது. அவன் இனிமேல் ராமனுக்கு ஒரு சாதாரண வேலைக்காரன். நம் முடைய அந்தப் புரத்தில் இனி மானம் சந்தோஷம் என்பது இல்லை'' என்று சொல்லித் துக்கத்தினால் மேலே பேச முடியாமல் நிறுத்தினாள்.

கைகேயி இதையெல்லாம் கேட்டு உண்மையில் வியப்படைந்தாள். ''ஏன் இவ்வாறு பயப்படுகிறாள், மந்தரை? ராமனுடைய குணம் இவளுக்குத் தெரி யாதா? தருமமே வடிவம் கொண்டவன் அல்லவா அவன்?'' என்று எண்ணி னாள்.

''மந்தரா! ராமனுடைய சத்தியம், சீலம், அடக்கம் இவற்றை நாம் எல் லோரும் கண்டு மகிழ்ந்தோம் அல் லவா? அவன் மூத்தவன், ராஜ்யம் அடைகிறான். அவனுக்குப் பிறகு பரதன் அடையப் போகிறான். இதில் என்ன கெட்டுப் போச்சு? ஏன் தோழி, நீ வருத்தப்படுகிறாய்? ராமனுக்குப் பிறகு நூறு வருஷம் பரதனும் அரசனாகி

## 'ஜெ' தேர்ந்தெடுத்த சிங்கச் சின்னம்!

''சிங்கச் சின்னத்தை வரைய வேண் டும் என்கிற ஐடியா உங்களுக்கு எப்படி வந்தது?'' - இந்தக் கேள்வியை அடின் ஃபிக்ஸ் விளம்பர நிறுவனத்தின் உரிமை யாளர் வாகதேவனிடம் கேட்டோம்.

''பத்தாவது நேரு தங்கக் கோப்பைக் கான சின்னம் வரையப்பட வேண்டும் என்று பல்வேறு ஏஜென்ஸிகளிடம் கேட்கப் பட்ட போது, எனக்கும் எங்கள் பிரதான ஆர்ட் டைரக்டர் காந்தி ஐயாவுக்கும் மொத் தம் ஆறு ஐடியாக்கள் தோன்றின. 1. ஸ்வஸ் திகச் சின்னம். ஹிட்லருடையது ஆன்டி கிளாக்வைஸ் என்பதைக் கடிகாரச் சுற்றுப் படி நாங்கள் மாற்றி அமைத்தோம். ஒரு மனித உருவமே ஸ்வஸ்திகச் சின்னமாக நிற்பதுபோல் உருவாக்கினோம். 2. ரத்தத் துளி ஒன்று சிதறிக் கைகளைப் போல் காட்சி தருவது. 3. இப்போது தேர்ந்தெடுக்கப்பட் டிருக்கும் சிங்கம். 4. டால்ஃபின். 5. கைகளையுடைய கால் 'பந்து. 6. ஆள் மாதிரியான ஓர் உருவம்.

''இந்த ஆறையும் அனுப்பியதில் முதல்வர் சிங்கத்தைத் தேர்ந்தெடுத் தார். பத்து இருபது என்று ஏராளமான சின்னங்களை மற்ற ஏஜென்ஸிகள் அனுப்பியிருந்த போதும், வெறும் ஆறு சின்னங்களை மட்டுமே அனுப்பி நாங் கள் வெற்றி பெற்றதில் பெரு மகிழ்ச்சி!'' என்கிறார் வாகதேவன்.


* வாகதேவன்


* காந்தி ஐயா

வாழ்வான். அழாதே, துக்கப்படாதே! ராமன் என்னிடம் எவ்வளவு அன்பாக இருக்கிறான்! தன்னைப் பெற்றவளிடம் கூட அவ்வளவு பிரியம் அவனுக்கு இல்லையே? தன் தம்பி ஒவ்வொருவனையும் தன் உயிராகவே அல்லவோ ராமன் கருதி வருகிறான். அவனைப் பற்றி நீ பயப்படுவது சரியே அல்ல'' என்று சொல்லி இயற்கை அன்புடன் கைகேயி மந்தரையின் பயத்தைத் தணிக்கப் பார்த்தாள்.

''ஐயோ, உன் புத்திக்கு நான் என்ன சொல்வேன்! ஏன் உன் மூளை இப்படிக் கெட்டுப் போயிற்று? ராமன் அரசனாக அபிஷேகமான பின் பரதனுக்கு ஏது இடம்? ராஜ குல வழக்கம் உனக்குக் கொஞ்சமும் தெரியவேயில்லை. ராமன் சிம்மாசனம் ஏறினானானால் அத்துடன் பரதனுடைய ராஜ வாழ்க்கை முடிந்தது. ராமனுக்குப் பிறகு, அவனுடைய மூத்த மகன், அவனுக்குப் பிறகு அவனுடைய மூத்த மகன், இப்படித்தான் உரிமை செல்லும். தம்பியைப் பற்றிப் பேச்சே கிடையாது. மூத்த மகன் மூத்த மகனாகவே சங்கிலி கோத்த வரிசைக் கிரமமாகப் போகும். தம்பி எவ்வளவு குணவானாக இருந்தாலும் அவனுக்கு இடமில்லை. இதுவே ராஜ குல வரிசைக் கிரமம். ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்து முடித்த பின் உன் மகன் அநாதையாவான். ராஜ வம்சத்தில் அவனுக்காவது அவன் மக்களுக்காவது இடமில்லை. இது உனக்குத் தெரியவில்லையே, என் கண்மணி! நான் என்ன செய்வேன்?

''ராமன் பட்டம் பெற்றபின் அவன் பரதனைச் சும்மா விடமாட்டான். பரதன் உயிருக்கு ஆபத்துண்டாகும். பரதன் உயிரோடு இருக்க நீ வேண்டினாயானால் அவன் மாமன் வீட்டிலிருந்தே எங்கேயாவது போய் மறைந்து க்ஷேமமாக இருக்கட்டும். இங்கே வந்தால் அவனுக்கு ஆபத்தே உண்டாகும். கௌசல்யைக்கு உன் மேல் மிகக் கோபம். அரசனுடைய பிரீதியை நீ சம்பாதித்திருப்பதாக எண்ணி நீ அவளைப் பல தடவை அலட்சியம் செய்திருக்கிறாய். இப்போது பழிவாங்குவாள் நிச்சயம். சக்களத்தியின் கோபம் மிகப் பொல்லாதது. ராமன் பட்டமடைந்தால் நம்முடைய பரதன் செத்தான் என்றே வைத்துக் கொள். ஆனபடியால் உறுதியாகத் தீர்மானிப்பாய். எப்படியாவது

பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்விக்க வேண்டும். ராமனை ராஜ்யத்திலிருந்து வெளியேற்றிவிட வேண்டும்.''

இவ்வாறு முடித்தாள் மந்தரை. கைகேயியின் உள்ளத்தில் பயம் புகுந்து கொண்டது. மந்தரை வெற்றியடைந்து விட்டாள். கிலி பிடித்த கைகேயியின் முகம் சிவந்து போய்ச் சுவாசம் வெப்பமடைந்தது. இன்னது செய்வது என்று தெரியாமல் மந்தரையிடம் தஞ்சமடைந்து பேச ஆரம்பித்தாள்.

புத்திர பாக்கியம் பெறாமலிருந்த காலத்தில் கைகேயியைத் தசரதன் ராஜகுல வழக்கத்தையனுசரித்து விவாகம் செய்து கொண்டான். அந்தச் சமயம் கைகேயியினுடைய தந்தை கேகய ராஜன் தசரதனிடம் வாக்குறுதி பெற்றான் - இவள் வயிற்றில் பிறக்கும் மகனுக்குப் பட்டம் என்று. இப்படி அப்போது சொன்னதில் ஒன்றும் வியப்போ வித்தியாசமோ இருந்திருக்க இடமில்லை. அப்போது யாருக்குமே குழந்தைகள் இல்லை. மற்ற மனைவிகளுக்குப் புத்திரப் பேறு உண்டாகவில்லை. புத்திரப் பேறு ஆசைப் பட்டே மூன்றாவது மனைவியைக் கொண்டது. அந்த ஆசையும் நிறைவேறவில்லை. வெகு நாட்கள் கழித்து யாகம் செய்து மூன்று மனைவிகளும் குழந்தைகள் பெற்றார்கள். பட்ட மகிஷியின் மகனான ராமன் நான்கு புத்திரர்களுக்குள் மூத்தவனாகவும், சகல உத்தம குணங்களையுடையவனாகவும், ராஜ்ய பாரம் வகிக்கும் தகுதியைக் கொண்டவனாகவும், மந்திரிமார்கள், நகரத்தார், கிராம வாசிகள், சிற்றரசர்கள் அனைவரும் யுவராஜ்யப் பதவிக்குத் தகுந்தவன் என்று அவர்களுடைய அன்பைச் சம்பாதித்தவனாகவும் இருக்க, எப்படி அவனுடைய உரிமையையும் ராஜகுல முறையையும் புறக்கணித்துப் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வது நியாயமாகும்? தவிர பரதனும் கைகேயியும் இதைப் பற்றி ஏதொரு ஆசை அல்லது எண்ணங் கூட வைத்தது கிடையாது. அதைப் பற்றிப் பேச்சே கிடையாது. ஆனபடியால் முறைப்படி ராமனை யுவராஜ்யப் பதவியில் அமர்த்துவதில் ஒரு சிக்கலும் ஏற்படாது என்று அரசன் எண்ணினான். அவ்வாறே கைகேயியின் உள்ளத்திலும் ஏதொரு கல்மஷமும் இருக்கவில்லை. இது கைகேயியின் நடவடிக்கைகளினால் வியக்தமாகத் தெரிகிறது. பரதன் உள்ளத்தைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை.

ஆயினும் தசரதன் ராமனிடம் சொன்னதைப் போல் நல்லவர்களுடைய தூய சிந்தையும் திடீர் என்று திரிந்து போகும். கெட்டவர்களுடைய துர்ப் புத்தியும் அதனோடு விதியும் சேர்ந்து விட்டால் யாருமே கெட்டுப் போகலாம். இதுவே கைகேயி விஷயத்தில் நடந்து விட்டது.

*தீய மந்தரை இவ்வுரை*
*செப்பலும் தேவி*
*தூய சிந்தையும் திரிந்தது*
*சூழ்ச்சியின் அரக்கர்*
*மாய வானவர் பெற்றநல்*
*வரம் உண்மை யாலும்*
*ஆய அந்தணர் இயற்றிய*
*அருந்தவத் தாலும்*

என்று பாடுகிறார் கம்பர். தாமதப்பட்டால் ஒருவேளை இடையூறு ஏற்படும் என்று எந்தக் காரணத்துக்காக பரதன் வருவதை எதிர்பாராமல் பட்டாபிஷேகம் முடித்து விடலாம் என்று தசரதன் அவசரப்பட்டானோ அதே காரணமும் அதே அவசரமும் கைகேயியின் சித்தத்தைக் கோணல் வழியில் செலுத்த மந்தரைக்கு நன்றாக உபயோகப்பட்டு விட்டது.

''பார், இவ்வளவு அவசரம் ஏன்? உன் மகன் ஊரில் இல்லாத சமயத்தில் அவனை மோசம் செய்யவே இந்த அவசர ஏற்பாடுகள் எல்லாம்! காதல் வேஷம் போடும் உன் அரசனுடைய வஞ்சக சமத்காரத்தைப் பார்!'' என்றாள்.

**ம**ந்தரை கைகேயினுடைய உள்ளத்தைக் கெடுத்துத் தன் ஆலோசனைக்குச் சம்மதிக்கச் செய்து விட்டாள். மொத்தத்தில் கைகேயினுடைய சுபாவம் சாதாரண ஸ்திரீ சுபாவம். நல்ல உணர்ச்சியும் பண்பாடும் உண்டு. கூர்மையான புத்தியும் உண்டு. ஆனால் லோக விவகாரம் அதிகமாக அறிந்தவளல்ல. பிடிவாதம் அதிகம். எளிதில் ஏமாற்றப் பட்டாள். செய்யும் காரியத்தின் முழுப் பலனை ஊகித்து அறியும் ஆற்றல் பெற்றிருக்கவில்லை. ராமாயணச் சங்கடப் படலம் ஆரம்பித்து விட்டது.

(தொடரும்)

# வட்டமேஜை

## அரைகுறை அரசியல் அறிவு!

◆ "இமேஜை கெடுத்த காமிக் ஷோ" தலையங்கம் கண்டேன். தமது தோழமைக் கட்சி என்பதைக் கூடப் பார்க்காமல், செயற் குழுவிலும் பொதுக்குழுவிலும் ஜெயலலிதா பேசி பேச்சுக்கள், அவரது அரை வேக்காட்டுத் தனமான அரசியல் அனுபவத்தையே காட்டுகின்றன.

சிதம்பரம், என்.ஆர். பாஸ்கரன்.

## வெகு யதார்த்தம்!

◆ அ.தி.மு.க நடத்திய 'காமிக் ஷோ'வின் ஜால வித்தைகளை விண்டு வைத்ததோடு மட்டுமில்லாமல், தமிழ்நாட்டில் காங்கிரஸ் நிலைத்து நிற்க வேண்டுமானால் மூப்பனார் - வாழப்பாடி கோஷ்டி ஒன்றுபட்டுச் செயல் பட வேண்டும்! என்ற கல்கியின் தலையங்கம் வெகு யதார்த்தம்!

முத்துப்பேட்டை, தஞ்சைத் தரணியன்.

## சிரிக்க வைத்த கார்ட்டூன்

◆ வசைமாரி பொழிந்து வரும், அ.தி.மு.க, காங்கிரஸ்காரர்களைக் கண்டு கொள்ளாமல், சுவாரஸ்யமாகச் சும்மா இருந்து வரும் பிரதமரைப் பற்றிய கார்ட்டூனைப் பார்த்தபோது, குபீர்ச் சிரிப்புத்தான் வந்தது!

கும்பகோணம், புலவர் எஸ்.கே. மூர்த்தி.

## நெருக்கடி தீரும்!

◆ புருஷோத்தமனின் நவீன ஃபர்னிச்சர்கள் தயாரிக்கும் திறன் வியப்பின் உச்சிக்கே அழைத்துச் சென்றது. சபாஷ்! இதன் மூலம் இடநெருக்கடி பிரச்னை தீரும் என்பது உண்மையிலும் உண்மை!

திருச்சி - 8, இ.மா. தமிழழகன்.

## அது ஒரு பொக்கிஷம்!

◆ 146 - வது தியாகராஜ ஆராதனை விழா சிறப்பு மடல் படித்து மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். போற்றிப் பாதுகாக்க வேண்டிய பொக்கிஷம் அது!

குமராட்சி, எம். பிரபு.

## ஏங்க வைத்த அட்டைப்படம்!

◆ அடுத்த வாரம் எப்போது வரும்... "பாண்டியன் மகள்" எப்போது வருவாள்.... எனத் தாண்டி விட்டது அட்டைப்படம்; கொள்ளை அழகு!

தஞ்சாவூர், யு. சந்திரோதயம்.

## ஏங்க வைத்த அட்டைப்படம்!

## இயல்பான முடிவு!

◆ கமலா கந்தசாமியின் 'மாப்பிள்ளை பற்றி விசாரித்தபோது.....!" சிறுகதையில், மாப்பிள்ளை சிவராமனின் வெளிப்படையான குணத்தைக் கண்ட எந்தப் பெண்ணும் இந்த முடிவைத்தான் எடுத்திருப்பாள்.

திருச்சி - 17, ஆர். பிரபாகரன்.

## நெகிழவைத்த கவிதை

◆ பிரியராஜனின் காலத்திற்கேற்ற கவிதை நெகிழவைத்தது. ஜியாவின் "இரக்கம்" சிறுகதை இன்றைய மக்களின் உணர்வைத் துல்லியமாய்ப் பிரதிபலித்தது.

தஞ்சாவூர், கே. காமாட்சி.

## பகபதிக்கு வாழ்த்து!

◆ அயல்நாடுகளுக்கு உயர் கல்வி கற்கச் செல்லும் பலர், அங்கேயே தங்கித் தாய் நாட்டை மறந்து வாழும் இத்தருணத்தில், பிஎச்.டி பட்டம் பெற்ற பகபதி சேரிகளில் தமது சேவையைத் தொடர்ந்து வருவதை நினைக்கும் போது, நெஞ்சம் நெகிழ்ந்து போயிற்று. "விஞ்ஞானிகளின் ஆய்வு, மக்களைச் சென்றடைய வேண்டும்" என்ற இவரது கொள்கைப் பிடிப்பும் தன்னம்பிக்கையும் வளர வாழ்த்துக்கள்!

சென்னை - 33, இ. ராமதாஸ்.

## கொடுத்து வைத்தோம்!

◆ ஆர். சூடாமணியின் 'நண்பர் திருமலை' சிறுகதையைப் படித்ததே ரொம்பக் கொடுத்து வைத்த உணர்வை ஏற்படுத்துகிறது.

கடையல், அ. செபாஸ்டின்.

## முந்திக் கொண்ட கல்கி!

◆ "என் இனிய இயந்திரா" தொலைக் காட்சித் தொடரைப் பற்றிய சுவையான செய்திகளைச் சூடாகத் தருவதில் கல்கி முந்திக் கொண்டு விட்டது. மேலும் முதுகுத்தண்டின் கோளாறுகள் பற்றிய பயனுள்ள மருத்துவக் கட்டுரைக்குப் பாராட்டுக்கள்.

சென்னை - 78, வி.எஸ். அனந்தராமன்.

## 1. எனக்கு இரண்டு முகங்கள்

# நவரஸ நினைவுகள்

## சௌகார் ஜானகி

இயற்கையின் அழகுகளை ரசித்து மெய்மறக்கிறவள் நான். ரோஜாப் பூவில் பனித்துளியும் சூரிய ஒளியில் மின்னும் பசுந்தளிர்களும் என்னைக் கட்டிப் போடும். இந்த எளிய அழகுகளைத் துய்த்துக் கொண்டு கல்யாணமும் கார்த்தியுமாகக் கலகலப்பான குடும்ப வாழ்க்கைக்குப் பதினைந்து வயதில் தயாராயிருந்தேன். ஆனால் வாழ்க்கை எனக்கு விதித்தது நேர்மாறானது - கூசச் செய்யும் ஒளியில், ஒப்பனைக்கும் அடுக்கு மொழி வசனங்களுக்கும் இடையே செயற்கை உலகில் வளைய வந்தேன். அந்த வாழ்க்கையையும் ரசித்து வாழ முயன்றேன். ஆனால் அதன் முடிவில் வெறுமையும் உடல் சோர்வும்தான் எஞ்சின. சோர்வு என்னைக் கட்டிப் போட நான் என்றுமே அனுமதித்ததில்லை. செயற்கை வாழ்வின் நினைவுகளை விரட்டிவிட்டு, இப்போது புதிய பாதையில் பிரவேசித்திருக்கிறேன் - கோகநட் குரோவ் என்ற வித்தியாசமான உணவகத்தை வெற்றிகரமாக நடத்தி வருகிறேன். இந்தத் தொழிலைத் தேர்ந்தெடுத்த என் துணிவை, கேலியாய் விமர்சிப்பவரும் உண்டு, பாராட்டிப் புகழ்பவரும் உண்டு. எல்லாவற்றுக்கும் இடையே ரப்பர் பந்தாக என் மனத்தில் மீண்டும் மீண்டும் எழும் கேள்வி : 'நான் ஒரு பயனுள்ள வாழ்க்கை வாழ்ந்திருக்கிறேனா?' என்பதுதான்....

இந்த சமயத்தில்தான் நான் மறக்க முயன்றவற்றை மீண்டும் நினைவுகூரும்படி இத் தொடர் தூண்டுகிறது. 1949 க்குப் பின்னோக்கிச் செல்லுகிறேன்.

முழு நிலவு ஒளி வீசும் ரம்மியமான சூழ்நிலை... வீட்டின் மேல் மாடி. ஒரு ஈஸி சேரில் சாய்ந்தபடி உட்கார்ந்திருக்கிறார் கதாநாயகன். நிலவொளி கோலமிடும் அவர் முகத்தில் யாரையோ ஆவலுடன் எதிர்பார்க்கும் பாவம். -

நாயகி மெள்ள அடியெடுத்து வைத்து அவரை நெருங்குகிறாள். கையில் தாம்பூலத் தட்டு. அவள் முகத்தையே வைத்த கண் வாங்காமல் பார்க்கிறார் அவர். அவளோ நேருக்கு நேர் அவரை ஏறிட வெட்கப்பட்டுக் கொண்டு, தலைகுனிந்தபடி வெற்றிலையை மடிக்கிறாள். மடித்த வெற்றிலையை அவரிடம் நீட்டும்போது, அவள் பார்வையென்னவோ பூமியை நோக்கித்தான் இருக்கிறது.

''ஊஹூம்! இப்படிக் கொடுத்தால் வாங்கிக் கொள்ள மாட்டேன். தாம்பூலத்தை என் வாயில் ஊட்டு...'' என்கிறார் அவர்.

வெட்கத்தில் முகம் சிவக்க, சட்டென்று பட்டும் படாமல் அவர் வாயில் தாம்பூலத்தை ஊட்டிவிட்டுச் சற்று விலகி நிற்கிறாள் கதாநாயகி.

''கட்! கட்!'' டைரக்டர் எல்.வி. பிரசாத் அறிவிக்க, டேக் ஓ.கே ஆகிறது. டைரக்டர், கேமராமேன் உள்பட படப்பிடிப்புக் குழுவினர் அனைவரும் கை தட்டிப் பாராட்டுகிறார்கள்....

எனது முதல் படமான 'சௌகாரில்' படமாக்கப்பட்ட முதல் காட்சி. நேற்றுத்தான் நிகழ்ந்தது போல் இருக்கிறது. ஆனால் நாற்பத்து மூன்று ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. இந்தக்கால கட்டத்தில் சுமார் 375 படங்களில் நடித்து விட்டேன்.

'வாழ்ந்தால் சௌகார் ஜானகியைப் போல் வாழ வேண்டும்' என என்னிடம் நேரடியாகவும் மறைமுகமாகவும் பலர் சொல்கிறார்கள்.

ஆனால், அவர்கள் அப்படிச் சொல்லும் போது 'ஆண்டவனே! என்னைப் போல் ஒரு வாழ்க்கை எந்தப் பெண்ணுக்குமே அமைய வேண்டாம்' என்று மனத்துக்குள் வேண்டிக் கொள்வேன்.

காரணம், என்னைப் பார்த்து வியந்தவர்களுக்கு எனது ஒரு முகம் மட்டுமே தெரியும். அது என் திரையுலக வெற்றி முகம். எனது இன்னொரு முகம் ஒரு சராசரி மத்திய தர குடும்பத்துப் பெண்ணின் முகம். அந்த கைய பெண்ணுக்கு இருக்கக்கூடிய நியாயமான ஆசைகள் கூட நிறைவேறாததால் அந்த முகத்தில் சோக ரேகைகள் மண்டிக்

கிடப்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்? முற்றிலும் மாறுபட்ட இந்த இரு முகங்களுடனும் வாழப் பழகிக் கொண்டு விட்டேன். ஆனால் ஆரம்பத்தில் அது அவ்வளவு சுலபமாக இருக்கவில்லை. பொழுது போக்குக்காகவோ, கலைச் சேவை செய்ய வேண்டும் என்றோ பேரும் புகழும் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்றோ நான் நடிப்பதற்கு வரவில்லை. என் மூன்று மாதப் பெண் குழந்தைக்கு நல்ல வாழ்க்கை அமைத்துத் தருவதற்காக நான் உழைத்துச் சம்பாதிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது; அதனால்தான் நடிப்புத் துறைக்குள் நுழைந்தேன்.



★ 'சௌகார்' படத்தில்....

'**சௌ**கார்' படத்தில் என்.டி.ராமாராவுக்கு (அவர்தான் கதாநாயகர்) வெற்றிலை மடித்துக் கொடுக்கும் காட்சியில் நடித்து, முதல் ஷூட்டிங்கிலேயே கை தட்டு வாங்கி விட்டது என்னவோ வாஸ்தவம். ஆனால் அந்தக் காட்சியில் நடிக்கும் போது, எனக்கு உண்மையிலேயே வெட்கமும் பயமும் பிடுங்கித் தின்றன :

கட்டுப்பாடான குடும்பத்தில் பிறந்து - வளர்ந்தேன். வாழ்க்கையில் நான் அனுபவித்திராத ஓர் இனிமையும் ரம்மியமும் காட்சியமைப்பிலும் கதையிலும் அமைந்து என் நடிப்புக்குச் சவால் விட்டன. 'இந்தக் காட்சியில் சரியாக நடிக்காவிட்டால் இவளுக்கு நடிப்பே வராது' என முடிவு செய்து என்னை நீக்கிவிடுவார்களோ என்ற பயம்!

இந்த நிஜ உணர்ச்சிகளின் கலவையே அந்தக் காட்சிக்கு உயிரூட்டியிருக்கும் என்று இப்போது எண்ணிப் பார்க்கையில் தோன்றுகிறது. 'இந்தப் படத்தில் நல்ல பெயரெடுத்தால்தானே அடுத்த வாய்ப்புக் கிடைக்கும்... குடும்பத்தை ஓரளவுக்காவது என்னால் காப்பாற்ற முடியும்....?'

**நா**ன் கவலைப்பட்டதற்கு ஏற்றாற் போல் ஒரு சம்பவமும் நடந்தது:

திருடர்கள் என்னையும் என் மாமனாரையும் தூண்களில் கட்டிப் போட்டு விட்டு அடிப்பது போன்ற காட்சி. அந்தக் காட்சியில் வலி பொறுக்க முடியாமல் அழுவதாக நான் நடிக்க வேண்டும்.

முதல் டேக்கில் நான் அழுதது டைரக்டருக்குத் திருப்தியளிக்கவில்லை. மறுபடியும் ஒரு முறை அக் காட்சியை எடுக்கலாம் என்றார். அப்போதும் டேக் 'ஓ.கே' ஆகவில்லை. மீண்டும் இரண்டு மூன்று முறை முயன்றும் எனக்குச் சரியாக நடிக்க வரவில்லை. டைரக்டர் எல்.வி. பிரசாதுக்குக் கடுமையான கோபம் வந்துவிட்டது.

''என்ன பொண்ணும்மா நீ! அழக் கூடத் தெரியலியே! சும்மாவா நடிக்கறே? காசு வாங்கிக்கிட்டுத்தானே நடிக்கறே....! அப்புறம் ஒழுங்கா நடிக்கலைன்னா எப்படி....?''

என்று கடுமையாய்த் திட்டித் தீர்த்தார்.

நான் கூனிக் குறுகிப் போனாலும் அதை வெளியே காண்பித்துக் கொள்ளாமல் மறைத்துக் கொள்ள முயன்றேன். 'இந்த முறை எப்படியும் டேக் ஓ.கே. வாங்கி விடுவது' என்ற வைராக்யத்துடன் தயாரானேன். 'ஸ்டார்ட்' சொன்னதும் டைரக்டர் சொல்லிக் கொடுத்ததை மனத்தில் வரவழைத்துக் கொண்டு அவர் எதிர்பார்த்தபடியே அழுதேன்.

டேக் 'ஓ.கே.' ஆயிற்று. 'வெரி குட்! பிரமாதமாய் அழுதாய்!' என்று பாராட்டினார் டைரக்டர். நான் அவரை நேருக்கு நேர் பார்க்காமல், உடனடியாக அந்த இடத்தை விட்டு அகன்று மேக்-அப் ரூமுக்கு ஓடினேன். அங்கே கதவை மூடிக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதேன். டைரக்டர் கேட்டபோது வர மறுத்த கண்ணீர் இப்போது தாரை தாரையாக வழிந்தது. அவரது சொல்லம்புகளை நினைக்க நினைக்க நெஞ்சே வெடித்துவிடும் போலிருந்தது.

அந்தச் சமயத்தில் மேக்-அப் ரூமின் கதவு தட்டப்பட்டது. கதவைத் திறப்பதற்கு முன் அழுகையை நிறுத்தி, கண்களைத் துடைத்துக் கொண்டாலும் என் முகம் என் உணர்ச்சிகளைக் காட்டிக் கொடுத்தது. திறந்த கதவின் வெளிப் பக்கத்தில் நின்றிருந்தார் டைரக்டர் எல்.வி. பிரசாத்.

(தொடரும்)

படம் உதவி :

**பிலிம் நியூஸ் ஆனந்தன்**

# சிறையிலே மேயர்!



✱ சம்பாஜிராவ்

பெங்களூர் ரிப்போர்ட் :

மகாராஷ்டிரத்தை ஒட்டியுள்ள பெல்காமில் மகாராஷ்டிர ஏகிகரன் சமிதி (எம்.இ.எஸ்) என்ற கட்சிதான் வலுவான கட்சி. கன்னடர்களை எல்லாவகையிலும் எதிர்க்கும் கட்சி இது. நகரசபைத் தேர்தலிலும் இந்தக் கட்சிதான் மாநகராட்சியைப் பிடித்தது. பிற்பாடு கட்சிக்குள்ளேயே பிளவு ஏற்பட்டதால் சம்பாஜிராவ் பாட்டீல் (இவர் ஏற்கெனவே ஒரு முறை மேயராக இருந்தவர்.) தம்முடைய ஆதரவாளர்களுடன் வெளிவந்து போட்டிக் கட்சி நடத்தி வருகிறார். கொஞ்சம் நிழலான காரியங்களுக்கும் அடிதடி சமாசாரங்களுக்கும் பேர்போனவர் என்று சொல்லப்படுகிறது. ஏதோ ஒரு விவகாரத்துக்காகச் சென்றமாதம் போலீஸ் இவரைக் குண்டர்கள் சட்டத்தின் கீழ் கைது செய்து சிறையில் அடைத்தது. இந்தச் சமயத்தில் மேயர் தேர்தல் வரவே, சிறையிலிருந்து பர்மிஷன் வாங்கிக் கொண்டு வந்து மேயர் தேர்தலில் போட்டியிட்டார் சம்பாஜிராவ். எம்.இ.எஸ்ஸின் அதிகாரபூர்வ வேட்பாளரைத் தோற்கடித்து வெற்றியும் பெற்றுவிட்டார். மேயராகப் பதவி ஏற்றுக் கொண்டு மறுபடி சிறைக்கு வந்துவிட வேண்டும் என்று உத்தரவிட்டது கோர்ட். அதன்படி பதவி ஏற்பு முடிந்தவுடன் சிறைக்குப் போய்விட்டார் மேயர்!

குழந்தைகள், ஏகப்பட்ட புத்தகங்களைச் சுமந்தபடி கூன்விழுந்து பள்ளிக்குச் சென்று வருவது ஒரு பரிதாபமான காட்சி. இதை எதிர்த்து ரங்கநாதாச்சார் என்பவர் ஹைகோர்ட்டில் ஒரு வழக்குத் தொடர்ந்தார். வழக்கை ஏற்றுக் கொண்ட நீதிபதி குழந்தைத் தொழிலாளர்களை வேலை வாங்கிக் கொடுமைப் படுத்துவதற்கும் இதற்கும் பெரிய வித்தியாசமில்லை என்று சொல்லிக் குழந்தைகளின் புத்தகச் சுமையைக் குறைக்க அரசாங்கம் கல்வி நிறுவனங்களுக்கு உடனடியாய் உத்தரவிட வேண்டும் என்று தீர்ப்புக் கூறியிருக்கிறார். இந்தியா முழுமைக்கும் வரவேண்டிய உத்தரவல்லவா, இது!

அயோத்தி விவகாரத்தில் நரசிம்மராவ் இன்னமும் சரியாக நடந்து கொண்டிருக்க வேண்டும் என்று கருத்துச் சொல்லப் போய், கட்சிக்குள் நிறையப் பேர் வீரேந்திர பாட்டீலுக்கு எதிராக அணி திரண்டு விட்டார்கள். ''வீரேந்திர பாட்டீல் மூத்த தலைவர்... அவரது கருத்துக்களை வெளியிட அவருக்குச் சுதந்திரம் இருக்கிறது என்ற அளவில் இதனை விட்டு விடலாம்'' - என்று முதல்வர் சமாதானம் செய்தது எடுபடவில்லை.

✱ வீரேந்திர பாட்டீல்















டெல்லி வரை விவகாரத்தை எடுத்துச் சென்று, பாட்டீல் மீது நடவடிக்கை எடுத்தே ஆக வேண்டும் என்று ஒற்றைக் காலில் நிற்கிறது ஒரு கோஷ்டி. "பதவியை இழந்து ஒரு மாதம் சும்மா இருந்த பங்காரப்பா மறுபடி தம்முடைய அரசியலை ஆரம்பித்து விட்டார் என்பதுதான் இதற்கு அர்த்தம்" - என்கின்றனர் பார்வையாளர்கள்.

**வீ**ரப்ப மொய்லி செய்த காரியங்களிலேயே மிக நல்ல காரியம் 'சிங்கள் டிஜிட்' என்று சொல்லப்படுகிற ஒற்றை எண் லாட்டரியை ஒழித்ததுதான். இந்த ஒற்றை எண் லாட்டரி போதைப் பொருளைவிட அதிகமாக மக்களைக் கெடுத்துக் கொண்டிருந்தது. தினந்தோறும் இரண்டரை மணி ஆகிவிட்டால் லாட்டரிக் கடைகளில் கூட்டம் உதைபடும். பெங்களூர் தொழிற்சாலை நகரமானதால் ஒவ்வொரு தொழிற்சாலையிலும் இன்றைக்கு இந்த எண் என்பது போல பெட்டிங்குகள்... ஒன்றுக்கு நான்கு சதவீதம் என்பதிலிருந்து ஒன்றுக்குப் பத்து என்ற அளவில் கூட ரகசிய சூதாட்டம் இருக்கும்... எல்லாம் ஒரு முடிவுக்கு வந்துவிட்டது.... 'அப்பாடா' என்று பெருமூச்சு விடுகின்றனர் இல்லத்தரசிகள்.

**ந**வீன ரக வீரிய விதைகளின் மூலம் அமெரிக்க நாட்டுத் தொழில் நுட்பத்துடன் சோதனை முயற்சியாக விவசாயம் செய்ய அரசாங்கம் முன்வந்தது. இதன் தலைமை அலுவலகம் பெங்களூரில் இருக்கிறது. விவசாய சங்கத்தைச் சேர்ந்த நூற்றுக்கும் மேற்பட்டோர் கையில் ஆயுதங்களுடன் திடீரென்று இந்தக் கட்டடத்துக்குள் நுழைந்தனர். அப்புறம் என்ன... அடி... உடை.... நொறுக்கு... கொளுத்துதான்! ஃபைல்கள், ரிகார்டுகள், கம்ப்யூட்டர்கள் எல்லாமே இவர்களின் வன்முறைக்கு இரையாகின. கர்நாடக விவசாய சங்கம் இந்தப் போராட்டத்திற்கு முன் நின்றது. 'அந்நியனுக்கு இங்கே என்ன வேலை' என்பதும் 'உள்ளூர் விவசாயம் பாதிக்கும்' - என்பதும்தான் இவர்களின் கோபத்திற்குக் காரணம். 'விஞ்ஞானமும் நவீன தொழில் நுட்பமும் வேண்டாம்; நாங்கள் இருக்கிற மாதிரியே இருப்போம்' என்பது என்ன சித்தாந்தமோ புரியவில்லை.

– பெர்னாண்டஸ்

உங்கள் செல்வம் :

# ரிசர்வ் வங்கிக்கு இரட்டைப் பணி!


வேங்கடரமணன்

கடந்த இரு ஆண்டுகளாக ரிஸர்வ் வங்கி கவர்னராக இருந்த எஸ். வேங்கடரமணன் சென்ற மாத இறுதியில் ஓய்வு பெற, புதிய கவர்னராக ஸி. ரங்கராஜன் பொறுப் பேற்று இருக்கிறார்.

ரிஸர்வ் வங்கி என்பது வங்கிகளின் வங்கி என்று கருதப்படுகிறது. அதாவது நாட்டிலுள்ள எல்லா வங்கிகளின் செயல் பாட்டையும் கண்காணித்துக் கட்டுப்படுத்து கிறது. டெபாசிட்டுகள் மீது தரப்படும் வட்டி விகிதங்களை நிர்ணயிப்பது ரிஸர்வ் வங்கியே. பல்வேறு தொழிலகங்களுக்கு எவ்வளவு கடன் தரலாம், அதற்கு எந்த அளவில் அடமானங்கள் பெறுதல் வேண் டும், எந்தெந்த ரகத் தொழில்களுக்கு வட்டி விகிதத்தில் சலுகை காட்டலாம் என்பதை யெல்லாம் ரிஸர்வ் வங்கிதான் சொல்கிறது. நாட்டின் அந்நியச் செலாவணி கையிருப் பைக் கட்டுப்பாட்டில் வைத்திருப்பதும் பல் வேறு வங்கிகளின் அந்நியச் செலாவணி நட வடிக்கைகளைக் கண்காணிப்பதும் ரிஸர்வ் வங்கியே. அரசாங்கத்தின் கடன் வாங்கும் நடவடிக்கைகளை மேற்பார்வையிடுவதும் அதன் பணிகளில் ஒன்று. வங்கிகள் தங்க ளிடம் உள்ள டெபாசிட்டுகளில் குறிப்பிட்ட ஒரு சதவீதத்தை ரிஸர்வ் வங்கியில் போட்டு வைக்க வேண்டும் எனவும், மேலும் ஒரு குறிப்பிட்ட சதவீதத்தை அரசாங்கக் கடன் பத்திரங்களில் முதலீடு செய்ய வேண்டும் எனவும் வரைமுறைகளை வகுத்து அமல் படுத்துவதும் ரிஸர்வ் வங்கிதான்.


ரங்கராஜன்

இந்தப் பொருளாதார ரீதியான பணி கள் தவிர, அரசுக்கு அறிவுரை வழங்கும் பணிகளும் ரிஸர்வ் வங்கிக்கு உண்டு. இதன் முக்கியத்துவம் முன் னதற்குச் சற்றும் குறைந்ததல்ல. ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்கள் அடுத்த தேர்தலில் வோட்டுக்களைப் பெறும் சுயநல நோக்கில் மக்களைக் கவரும் திட்டங்களில் பணத்தை விர யம் செய்ய முற்படுவார்கள். உற்பத் திக்கு உதவாத இத்தகைய செலவி னங்களால் மத்திய அரசுக்கு ரிசர்வ் வங்கியிடம் உள்ள கடன் உயர்ந்து கொண்டே போகும். அதற்கேற்ப நோட்டுக்கள் அச்சடிப்பதும் அதிக மாகும். இதன் விளைவு, பற்றாக் குறை பட்ஜெட்டும் பணவீக்கமும் விலைவாசி உயர்வும் தாம்.

இதையெல்லாம் தவறு என்று எடுத்துக் கூறி, அரசை நல்வழிப் படுத்தும் பணியில் கடந்த காலத்தில் ரிஸர்வ் வங்கி வன்மையாகச்

செயல்படாமல் இருந்து விட்டது. (அல்லது மத்திய அரசு ரிசர்வ் வங்கியின் அறிவுரைக்கு செவி மடுக்காமல் போனது.) இதன் விளைவுதான் ஆண்டொன்றுக்குப் பதினைந்து சதம் என்ற அளவில் பண வீக்கம் அதிகரித்து, 1948 - ம் ஆண்டுடன் ஒப்பு நோக்க, ரூபாயின் மதிப்பு ஆறு பைசாவுக்கு வீழ்ச்சி அடைந்தது. இதற்கேற்ப விலைவாசியும் உயர, மக்கள் அவதிப்படுகின்றனர்.

வேங்கடராமணன் பதவிக் காலத்தில் இந்த விஷயத்தில் ஒரு திருப்புமுனை ஏற்பட்டது. அரசுக்கு அவர் வெளிப்படையாகவே வழங்கிய அறிவுரைகளுக்கு நிதி அமைச்சரும் செவி சாய்த்து ஏற்றுக் கொண்டிருக்கிறார். இதன் விளைவாக ஓர் இக்கட்டான சந்தர்ப்பத்தில் படுமோசமான பொருளாதார நிலையிலிருந்து இந்தியாவை மீட்டு, துரிதமான முன்னேற்றம் என்ற லட்சியம் நோக்கி நாட்டைத் திசை திருப்ப முடிந்திருக்கிறது.

துரதிர்ஷ்டவசமாக வேங்கடராமணனின் பதவிக் காலத்தின் இறுதிப் பகுதியில் பங்கு மார்க்கெட் ஊழல் வெடித்தது. இதனால் அவர் செய்த நல்ல காரியங்கள் கூட மறைக்கப்பட்டு விட்டன. ரிஸர்வ் வங்கி மற்ற வங்கிகளைக் கண் காணிக்கும் தனது முதற் பணியில் சமீப காலத்தில் சற்றுக் கண்ணயர்ந்து விட, மோசடிக்குத் தயங்காத புரோக்கர்களும், வங்கிகளும் சேர்ந்து கொண்டு (குறிப்பாக அயல் நாட்டு வங்கிகள்) குறுக்கு வழிகளில் பணம் பண்ணி விட்டார்கள். பங்கு பத்திர ஊழல் விசுவரூபமெடுத்து விட்டது.

புதிதாகப் பதவிஏற்றுள்ள கவர்னர் ரங்கராஜன், தமது முதல் பணி ரிஸர்வ் வங்கியின் செயல் திறனை அதிகரிப்பது தான் என்று கூறியுள்ளார். ஏற்கெனவே பாடம் கற்றுக் கொண்டிருப்பதால் பிற வங்கிகளை மேற்பார்வையிடும் பணி செவ்வனே நடக்கும் என்று எதிர்பார்க்கலாம். அத்துடன், ரிஸர்வ் வங்கியின் இரண்டாவது அறிவுரை வழங்கும் பணியிலும் வேங்கடராமணன் போலவே ரங்கராஜனும் அச்சமற்றுச் செயலாற்றி, நாட்டின் பொருளாதாரம் பலப்பட வழி வகுப்பார் என்று எதிர்பார்ப்போம்.

– வி. கோபாலன்



## கால்பந்தாட்டம் : சில விவரங்கள்!

# ஐந்தே விநாடிகளில் ஒரு கோல்!



* உலகக் கோப்பை

●● கால்பந்தாட்டத்திற்கான உலகக் கோப்பை உருவாக்கப்பட்டது 1930 - ல். முதன் முதலாக உலகக் கோப்பையைக் கைப்பற்ற ஆடிய அணிகள் உருகுவேவும் அர்ஜென்டைனாவும். இறுதியில் உருகுவேதான் கோப்பையைத் தட்டிச் சென்றது.

●● 1962 - ல் பிரேஸிலில் ஆடப்பட்ட கால்பந்தாட்டம், மாலை 9.30 மணிக்குத் துவங்கி அதிகாலை 1.30 மணி வரை ஆடப்பட்டது. இதுதான் மிகவும் நீண்ட நேரம் ஆடப்பட்ட ஆட்டமாகச் சொல்லப்படுகிறது.

* சுவாமி விவேகானந்தர்

●● 74 - ம் ஆண்டு பிரேஸில் ஆட்டக்காரர்கள் போட்ட கோல்தான் மிகக் குறைந்த நேரத்தில் போடப்பட்ட கோல். மைதானத்தின் மையப்பகுதியிலிருந்து பந்து உதைக்கப்பட்ட ஐந்தாவது விநாடியிலேயே கோல் போட்டு விட்டார்கள்!

●● கால் பந்தாட்டத்திற்கென்று விதிமுறைகள் ஏற்படுத்தப்பட்ட பிறகும் கூட ஒவ்வோர் அணியிலும் இருபது பேர் இருந்தார்கள். 1870 - ல் இங்கிலாந்தில் ஆரம்பிக்கப்பட்ட கால்பந்தாட்டக் கழகம்தான் பதினொரு பேர் என்கிற நிலையைக் கொண்டு வந்தது.

●● மூன்றாம் எட்வர்டு மன்னர் 1365 - ல் கால்பந்தாட்டத்தைத் தடை செய்துவிட்டார். காரணம், தமது வீரர்கள் எப்போது பார்த்தாலும் கால்பந்து விளையாட்டிலேயே காலம் கழித்துக் கொண்டிருந்ததால், யுத்தப் பயிற்சியில் பின் தங்கிப் போனார்கள் என்பதுதான்!

●● சிறந்த கால்பந்தாட்ட வீரர் எனில், கால்பந்து விளையாடும் போது, மைதானத்திற்குள் ஒவ்வொரு ஒன்பது நிமிடங்களுக்கும் சராசரியாக ஒரு மைல் தூரம் ஓடிக் கொண்டிருப்பார்!

●● ''பகவத்கீதை படிப்பவனைவிட, கால்பந்து விளையாடும் ஒரு வீரன் கடவுளுக்குப் பக்கத்தில் இருக்கிறான்'' என்று கூறியிருக்கிறார் சுவாமி விவேகானந்தர். உழைப்புக்கும் உடல் ஆரோக்கியத்துக்கும் அவ்வளவு முக்கியத்துவம் தந்தார் அவர்.

தொகுப்பு : **சார்ல்ஸ்**

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் : ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# வீட்டின் அழகு கதவில் தெரியும்!



விஞ்ஞான முறையில்
தயாரிக்கப்பட்ட

# மாயூரம் டிம்பர்

## கதவுகள்

அழகானவை, உறுதியானவை,
நீடித்து உழைப்பவை
காரணம்?

- ★ தேர்ந்தெடுக்கப்பட்ட உயர்தர மரம்
- ★ ஈரப்பதம் குறைக்கப்பட்டது.
- ★ ரசாயன கலவை பாதுகாப்பு
- ★ நேர்த்தியான இயந்திர வடிவமைப்பு

Made to order by:

# MAYURAM TIMBER TRADING COMPANY

83, G.S.T. Road, Tambaram – 600 045. Ph: 465297

# MAYAVARAM TIMBER DEPOT

No. 4, Post Office Road, Mayiladuthurai, Quaid-e-Milleth Dist.
Ph: 3216